# உரிமை முழக்கம்



கௌரவ ஆசிரியர்: பூண்டி திரு வீ. அப்பாசாமி வாண்டையார் B.A.

தமிழன்னை இன்று மீண்டும் அரியணை எறியிருக்கிருள்! ஆம்! ஐந்தாண்டுகட்கு முன் கவிஞன் கண்டகனவல்லா? நீலத்திரைக்கடல் ஓரத்திலே—தென்றமிழ்க்குமரித் துறைதனிலே—கவிமணி கண்ட கனவு இன்று நனவானது.

கன்னியாகுமரி மாவட்டம் பலபோராட்டங்களால் இன்று நம்முடன் இணைந்தது. தமிழன்னை தேவிகுமரி, சுசீந்திரம் திருக்கோயில், கன்னியாகுமரி, கலைவாணரின் காந்தி நினைவுச் சின்னம் ஆகியவை உள்ளிட்டகுமரிக்கோட்டம் தமிழகத்துடன் இணைந்ததை நினைவுறுத்துகிறது.

★ ★ ★

ஜனவரி இதழ்
திங்கள் ஒருமுறை









★

விலை 4 அணா



# உரிமை முழக்கம்

பிற்பட்டோர் முன்னேற்ற இதழ்.

| முரசு 1 | 1—1—57 | முழக்கம் 1 |
| --- | --- | --- |


தமிழ்ப் பெருமக்களே!
வணக்கம்.

சுதந்திரம் கிடைத்த பத்தாண்டுகட்குப் பின்னர் பாரதநாட்டில் மொழிவழி மாநிலங்களின் அமைப்பும், அம்மாநிலங்களின் மொழி ஆட்சிமொழியாயமைந்த நேரத்தில் தமிழ் மக்களின் நீண்ட நெடுந்தவத்திற்குப் பின் முத்தமிழ் வேந்தர்களால் வளர்க்கப்பட்ட சங்கத்தமிழ், பாண்டியன் மடியில் தவழ்ந்த பண்பார் செந்தமிழ்'அரசோச்ச அமைந்ததை அளவிலா ஆனந்தத்துடன் நாம் வரவேற்கிறோம். நற்றமிழன்னை நாடாள வேண்டுமென்று தனது உயிரையும் மதியாது தியாகம் செய்த வீரர்களுக்கு இந்த சந்தர்ப்பத்தில் தலைவணங்கி வீரவணக்கம் செய்கிறோம்.

கவிமணி தேசிக விநாயகனுர், மனோன் மணியம் சுந்தரனுர், உ. வே. சாமிநாதஐயர், பாரதியார், வ. உ. சிதம்பரனுர், திரு. வி. க தியாகி சங்கரலிங்கனுர் முதலியோர் ஏங்கி ஏக்கத்தை—நினைத்த நினைப்பை இன்று அவர்கள் சார்பாக அவர்களின் பின் தோல் றல்களாகிய நாம் பெற்று இன்புறுகிறோம்.

தமிழன்னை அரியணையில் அமர்ந்துவிட்டாள் என்ற நற்செய்திகிடைத்த அமயத்தில் முழக்கம் வெளிவருகின்றது. மொழி, கலை, வணிகம், சமூகம் இவைகளின் முன்னே றத்திற்கும், பிற்பட்ட நிலையிலுள்ள மக் ளின் நல்வாழ்விற்கும் அவர்களின் உய் போன்ற கொள்கைகளுக்கும் "உரிமை முழ கம்" முழங்கும் என்பதில் ஐயமின்று. தமி தங்கள் நாட்டைத் தமிழ்நாடாக்கி எல்லா துறைகளிலும் முன்னேற வேண்டுமென பதே எமது குறிக்கோள்.

ஆகவே நாமும் நாடும் முன்னே, முழக்கமிட வருகின்ற "உரிமை முழக்கம் உங்கள் சொந்த முழக்கம். நமதுகுறிக்கோள் வெற்றியடைய வாழ்த்துங்கள்! வரவேற் வளமாக்குங்கள்!

"உரிமை முழக்கத்தில்" வெளிவரும் கதை. கட்டுரைகள் வெளிவரும் பெயர்கள் யாரையும் குறிப்பிடுவன அல்ல.



ஓய்வுபெற்ற தலைமை ஆசிரியரும் "இராசேந்திரன்," "உலகப்பொது தமிழ் எழுத்தொலி" முதலிய சிறந்த நூல்களின் ஆசிரியரும், காலஞ்சென்ற நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் தம்பியுமாகிய திரு. ந. மு. கோவிந்தராயநாட்டார் அவர்களின் மகள் செல்வி—சிவகாமவல்லிக்கும், புதுக்கோட்டை திரு. அரங்கசாமி மங்காத்தேவர் அவர்களின் மகன் செல்வன்— பழநிவேல் B. Com., அவர்களுக்கும் 14—11—56 அன்று தஞ்சையில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.

வாழ்க மணமக்கள் !

# வாழ்த்துக்கள்!

பேரன்புடையீர்!

பிற்பட்ட நிலையிலுள்ளோர்களை முற்போக்காளர்களாக செய்யப்பாடுபடுபவர்களில் நண்பர் வீரபத்திரனும் ஒருவர். அச்சேவையில் நானும் பங்கெடுத்துக்கொள்ள வேண்டுமென்பது அவரதுஅவா. ஒத்த உணர்ச்சியைக்கொண்டயானும் மகிழ்ச்சியுடன்ஒத்துக்கொண்டேன்

எனவே, தமிழ் மக்களும் பிற்பட்ட நிலையிலுள்ள மக்களும் "உரிமை முழக்கம்" பத்திரிக்கையை வாழ்த்தி வரவேற்று நல்லாசி கூறி அதன் வளர்ச்சிக்கு உதவ வேண்டுகிறேன்.

என்னுடைய இதயங்கனிந்த வாழ்த்து!

இப்படிக்கு,

[ஒப்பம்] வீ. அப்பாசாமி வாண்டையார் B. A.,



"உரிமை முழக்கம்" என்ற திங்கள் வெளியீடு தங்களை ஆசிரியராகக்கொண்டு புத்தாண்டு வர விருப்பது கேட்டு, பெரு மகிழ்வுறுகிறேன். தங்கள் முயற்சி வெற்றி பெறுக. நல்ல தமிழ் ஏடுகளுக்கு நாட்டில் வரவேற்புண்டு. "உள்ளுவதெல்லாம் உயர்வுள்க" என்ற முறையில் "உரிமை முழக்கம்" என்ற பெயர் வைத்திருக்கிறீர்கள். குறிக்கோளை எட்ட அரு முயற்சி வேண்டும். குறிக்கோள் வாழ்வு இடும்பையின்கொள்கலமாயினும் ஆகும், தளராதுஉழைக்க.

[ஒப்பம்] P. நடராஜன் M. A., D. LITT.,
முதல்வர்,
தென் திருவிதாங்கூர் இந்து கல்லூரி,
நாகர்கோயில்.

"உரிமை முழக்கம்" எனும்தமிழ்ப்பத்திரிகைவெளிவரஇருப்பதை அறியவும், அதற்கு ஆசிரியராக திரு. வீரபத்திரன் அமைந்திருப்பதையும் அறியவும் அளவிலா பூரிப்பெய்துகிறேன். உரிமை முழக்கம் மக்கள் உரிமைக்காக உழைக்கவேண்டும். உரிமைக்காக உழைக்குமிடத்து இருக்கும் உரிமையை இழக்கநேரிடாது பார்க்கவேண்டும். உரிமையென்ற விடத்தில் கடமையும் அதனுடன் தொடர்ந்தே போகவேண்டும். மக்கள் உரிமையைக் காப்பாற்றவே சட்டங்கள் பல தீட்டப்பட்டிருக்கின்றன. சட்டங்களுக்கு மதிப்பு கொடுத்தாலொழிய மனித உரிமை பாதுகாக்கப்படமாட்டாது. ஆகவே மக்கள் உரிமைதான் என்ன என்று அளவிட்டு அவைக்காக முழங்கவேண்டும்.

[ஒப்பம்] C. மகாதேவன் B. A., B. L.,
நாகர்கோயில்.

உரிமைக்குப்போராடும் உள்ளம்கொண்ட தாங்கள் உரிமைக்கு முழக்கம் செய்ய இருக்கும் செய்தி உரிமையிழந்த நிலையிலிருக்கும் பலதிற மக்களுக்குப் பல வழிகளிலும் நலம் பயப்பதாக அமையும் என்று நம்புகிறேன்.

[ஒப்பம்] D. நாகலிங்கம் B. Sc.,
துணை பஞ்சாயத்து அலுவலர்,
திருத்துறைப்பூண்டி.

தஞ்சையில் புதிதாக தாங்கள் ஒரு பத்திரிகை ஆரம்பிக்கப்போவதாக அறிந்து சந்தோஷமடைந்தேன். அதற்கு என்னுடைய வாழ்த்துக்கள்.

[ஒப்பம்] அ. கிருஷ்ணசாமி வாண்டையார்,
பூண்டி.

"உரிமை முழக்கம்" என்னும் தமிழ் மாதப்பத்திரிகையைத் தாங்கள் ஆரம்பித்து நடத்த விருக்கும் நல்லசேதி எனக்குப் பெருமகிழ்வு தந்தது.

"உரிமை முழக்கம்" பத்திரிகையின் பெயரிலேயே, அது செய்யப்போகும் அரிய சேவைகளை யூகிக்கிறேன்—உணருகிறேன்—வாழ்த்துகிறேன். வாழ்க நீவிர்! பரவுக உரிமைமுழக்கம்!

[ஒப்பம்] N. S. கிருஷ்ணன்.

தாங்கள் "உரிமை முழக்கம்" என்ற தமிழ் மாதப் பத்திரிகையின் ஆசிரியப் பொறுப்பை ஏற்று நடத்துவதறிந்து பெரிதும் மகிழ்வடைகிறேன். உரிமை முழக்கம் எல்லாத்துறைகளிலும் தமிழுலகின் உரிமைகளுக்காகப் போராடுமென நம்புகிறேன்.

ஆழ்ந்த மொழிப்பற்றும், நாட்டுப்பற்றுமுடைய தங்களை ஆசியராகக்கொண்ட பத்திரிகை சிறப்புறத் திகழுமென்பதில் ஐயமில்லை. எனது நல் வாழ்த்துக்கள்.

[ஒப்பம்] டி. கே. ஷண்முகம்.

கௌரவ ஆசிரியர் ஸ்ரீ அப்பாசாமி வாண்டையார் தலைமையில், சமுதாயத்திலும் குடும்பங்களிலும் பத்திரிகை வளர்ந்து, சாந்தம் பெருகி, நீதிநழுவாமல், ஆசிரியர் ஸ்ரீ வீரபத்திரன் நேர்பார்வையில் நல்லது ஓங்கி, அறிவு வளர்ந்து, உண்மையை நிலைநாட்ட "உரிமை முழக்கம்" பண்பை உரிமையாக்கிக் கொள்ளவேண்டும்.

[ஒப்பம்] கி. துளசிஐயா.

தங்களை ஆசிரியராகவும், திரு. வீ. அப்பாசாமி வாண்டையாரவர்களை கௌரவஆசிரியராகவும் கொண்டு "உரிமை முழக்கம்" எனும் மாத இதழ் வெளியாவது குறித்துப் பெருமகிழ்ச்சி. இதழ் பெயருக்குத்தக உலுத்த சமுதாயத்தின் உரிமைக்காகப்போராடி உரிய நிலை அடைய உதவுமென நினைக்கிறேன். ஆசிரியரின் எழுத்தும் எண்ணமும் கௌரவ ஆசிரியரின் பொறுப்பும் கலந்து "உரிமை முழக்கம்" பல்லாண்டு வாழ்ந்து பணிபுரிய ஆசி கூறுகிறேன்.

[ஒப்பம்] சி. ரெகுபதி தேவர் B. A., B. L.

"உரிமையும் கடமையும் உணர்ந்த மக்களின் தரத்தால்தான் விடுதலை பெற்ற நாட்டின் பெருமை உயருகிறது. கடைமையை உணர்ந்து செயலாற்றும் மக்களின் உரிமைக்குரல், முழக்கத்துக்கு உரிய உண்மையான மதிப்பைக்கொடுக்கும் மக்களாட்சி, இந்நிலையில் ஆட்சியாளருக்கும் மக்களுக்கும் அருந்தொண்டாற்ற 1—1—57முதல் வெளிவரும் "உரிமைமுழக்கம்" வளர்ந்தோங்க வாழ்த்துகிறேன்.

[ஒப்பம்] A. S. S. காசிராஜ்,
"கௌரவ ஆசிரியர் குலாலன்."



★ ★ ★

உக்கடை பெருநிலக்கிழார் திரு. அ. அப்பாவுத்தேவர் அவர்களின் பெரு முயற்சியாலும், பேருதவியாலும், தேசீய விஸ்தரிப்புத்திட்டத்தின்கீழ் நிர்மாணிக்கப்பட்ட தானே இயங்கும் மின்சாரக் குடிதண்ணீர்க்குழாயை கனம் மந்திரி M. பக்தவத்சலம் அவர்கள் திறந்தபோது எடுத்த புகைப்படம்.

★ ★ ★

"உரிமை முழக்கம்" என்றபெயரில் திரு. வீ. அப்பாசாமிவாண்டையார் அவர்களை கௌரவ ஆசிரியராகக்கொண்டு ஒரு மாதப்பத்திரிகை வெளிவருவதறிந்து மகிழ்ச்சியுறுகிறேன். உரிமை முழக்கம் தமிழ் மக்களுக்கு நல்ல தொண்டாற்ற வேண்டுமென்று வாழ்த்தி வரவேற்கிறேன்.

(ஒப்பம்) அ. அப்பாவுத்தேவர்,
உக்கடை.

1—1—57 முதல் வெளிவரும் திங்கள் இதழ் "உரிமை முழக்கம்" பெருமனம் படைத்த அருங்குண நல்லார் சோழர்குலத் தென்றல் பூண்டி திரு. வீ. அப்பாசாமிவாண்டையார் B. A. அவர்களைக் கௌரவ ஆசிரியராகக்கொண்டும் சமூகசேவையிலும், அதன் முன்னேற்றத்திலும் சுறுசுறுவென்று சோர்விலா உழைப்பும் கொண்ட திரு, நாஞ்சில் P. வீரபத்திரன் அவர்களின் ஆசிரியத் தொண்டும் கொண்டிருப்பதால் "உரிமை முழக்கத்தின்" புகழ் ஒலி ஒவ்வோரிடங்களிலும் பரவி, மக்கள் நலத்துக்கு உறுதுணையாக நின்று உயருமென வாழ்த்துகிறேன்.

(ஒப்பம்) A. S S. இராமலிங்கம்,
நிர்வாக ஆசிரியர் "குலாலன்"

தமிழ்மொழிவளர, தமிழர் வாழ்வுயர, ஆட்சி மொழியால் நம் அன்னை அரியணையேறி செங்கோல் செலுத்த சிறக்கும் தண்டமிழ்க் கலைகள் எண்டிசைபொலிய, கண்ட நற்கருத்து கலையொடுமிளிர, பண்டை நற்றமிழர் பண்புகள் சிறக்க "உரிமை முழக்கம்" உயர்வுடன் வாழ்க!

(ஒப்பம்) டாக்டர் வி. எஸ். எஸ். மணி L. M. S., M. B H.

"உரிமை முழக்கம்" தமிழர்களின் உரிமைக்காகப்பாடுபட்டு வெற்றியடைய எல்லாம்வல்ல இறைவன் திருவருளை வேண்டுகின்றேன்.

கவிமணி இல்லம். (ஒப்பம்) K. குமாரசாமி.

தங்களை ஆசிரியராக்கொண்டு ஒரு மாதப்பத்திரிகை வெளிவருவதறிந்து மகிழ்ச்சியடைகிறேன். காவிரிக்குக் கரையெடுத்த கரிகால் வளவன் வழிவந்த பரம்பரையிலுதித்த திரு. அப்பாசாமிவாண்டையார் அவர்களை கௌரவ ஆசிரியராகப்பெற்று பத்திரிகை வெளிவருவது ஒருசிறந்த முன்னேற்றத்திற்கு வழிவகுக்குமெனக் கருதுகிறேன்.

(ஒப்பம்) M. ஷேக்தாவுது M. C.
புதுக்கோட்டை.

அருமை முழங்க ஆண்மையுடன் அறமே முழங்க அரசோச்சி
இருமை வழங்கும் இலங்கியங்கள் எங்கும் முழங்கத் தொண்டாற்றிப்
பெருமை முழங்குந் தமிழ்நாட்டிற் பிறரால் விளைந்த இடர்நீக்கி
ஒருமை முழங்க வருமிதழாம் "உரிமை முழக்கம்" வாழியவே!

(ஒப்பம்) வித்துவான். ச. பாலசுந்தரம்,
புலவர் கல்லூரி, கரந்தை.

திரு. தமிழர்களின் "உரிமை முழக்கம்" எழுந்தொலித்தபோது, அதன்முன்னணியில் ஓங்கியெழுந்த குரல்களிலே எங்கள் வீரபத்திரனின் குரலும் கேட்டது. தனது உழைப்பு பிற்பட்ட சமூகத்தின் உயர்வுக்கு என நாஞ்சில் வீரபத்திரன் தீர்மானித்துக்கொண்டு 'உரிமைமுழக்கம்" வெளிக்கொணர ஆரம்பித்திருப்பதை வரவேற்கிறேன்.

(ஒப்பம்) பி. எஸ். மணி,
இராம வர்மபுரம், நாகர்கோவில்.

# ★ நிலையும் நினைவும் ★

தஞ்சைவாணன்.

ஆம்! மணி பன்னிரன்டு. உறக்கம் என்னைக் கண்டு ஓடியது. வேப்பமரம் தன் அன்புக் குழந்தைகளாகிய இலைகளை உறங்க விட்டுக்கொண்டிருந்தது. இலைகள் அதன் அணைப்பில் அப்படியே அயர்ந்துவிட்டன. வியர்வை மயம். மறுபடியும் வேப்பமரத்தை நோக்கினேன். எதிரே ஒரு உருவம். கை கால்கள் நடுங்கின. என்னுள்ளம் பயத்திடம் போய் அகப்பட்டுக்கொண்டது. அப்படியே திகைத்து நின்றுவிட்டேன். கண்களிலிருந்து வழிந்த கண்ணீர் கண்ணைமட்டு மன்றிஎன் கன்னத்தையும் சிவப்பாக்கிவிட்டது. திரும்பிப்போய் படுக்கையில் படுத்தேன். பயம் தாங்க முடியவில்லை. வேப்பமரத்தைப் போன்று நானும் வாய்பேசாமல் உறங்கிவிட்டேன். நள்ளிரவு நன்னடைபோட்டு மெதுவாக நடந்து சென்றது. என்வாய்தான் பேசாமலிருந்ததேதவிர, என் உள்ளம் பேசாமலில்லை. அந்த உருவத்தைப்பற்றியே நினைத்துக்கொண்டிருந்தது.

அவள்! பருவத்தின் எல்லைக்கோட்டை அடைந்துவிட்ட பாவை—ஆடவரின் சாயலிலே அடிப்பட்ட ஆரணங்கு. அவள், என் இல்லத்து எழிலரசியாக—வீட்டுக்காரியாக இருப்பாள் என்று கனவிலும் நனவிலும் எண்ணிக்கொண்டேயிருந்தேன். அந்த எண்ணத்தை—நினைக்க முடியா நினைப்பை—அளவிட முடியாத ஆசையைக் குழிதோண்டிப் புதைத்துவிட்டாள். புதைத்தது யார்? அவளா ? இல்லை இல்லை! பின் யார்? "அவள் தாய் மரகதம்" என்றே அலறியது என் அந்தரங்கம். அவளின்றேல் என் காதலரசி என்னைக்களிப்புக்கடலில் மூழ்கடித்துக் கொண்டேயிருப்பாள்.

பெயர்! மலர்க்கொடி. பெயருக்கேற்ற மேனி. சுண்டியிழுக்கும் சொகுசுப் பார்வை —சுழற்சி மிக்க சுருண்ட கூந்தல் - அதன் நெளிவிலே ஒரு அலாதியான கவர்ச்சி, இத்தனையும் அவளுடலுக்கு அழகுதர மறுக்கவில்லை. நாங்களிருவரும் வேப்ப மரத்தின் நிழலில் தினமும் விளையாடுவோம்—பண்ணிசைப்போம்—வயிறுவெடிக்க வாய்விட்டுச் சிரிப்போம்—ஒருவரை யொருவர் வரம்புமீறி வர்ணிப்போம். இப்படியாக எங்கள் காதல் வாழ்க்கை வேம்பின்கீழ் இனித்தது. அவளைத் தவிர வேறுயாரிடத்திலும் அன்புகாட்டவோ ஆசைவைக்கவோ ஆதரவுதரவோ என்னுள்ளம் இடந்தராதது ஏனோ என்று தெரியவில்லை. ஒருநாள்! "அத்தான்விரைவில்வந்து விடுவீர்களா?" எந்தனுள்ளத்தைக் கொள்ளை கொண்ட ஓவியத்தை மறந்து அங்கேயே தங்கிவிடுவேன் என்றுஎண்ணினாய்? "இல்லை இல்லை ...அதற்கில்லை. .அத்தான் . ." "மலர்க்கொடி! அண்ணனுக்கு இப்பொழுது உடல் நிலை எப்படியிருக்கிறது என்றுதெரியவில்லை. எப்படியிருப்பினும் நான்போய் பார்த்துவிட்டு உடனே வந்துவிடுகிறேன்" என்றுகூறிச் சென்னைக்குக் கிளம்பினேன்.

சென்னையில் அண்ணன் இருக்குமிடத்திற்குச் சென்றேன். அங்கே! அம்மாவும் அப்பாவும் அண்ணனைத் தழுவி அண்ணன் மேல் விழுந்து அழுதுகொண்டிருந்தார்கள். எனக்கோ கோபம் தாங்கமுடியவில்லை. நோயாளியை நோய்கொல்வதற்கு பதிலாக இவர்களே கொன்றுவிடுவார்கள் போலிருந்தது இவர்களின் செய்கை. விரைந்தோடி வந்து அண்ணனைப் பார்த்தேன். கூற்றுவனின் அன்பைப்பெற்றுவிட்ட அண்ணனின் முகம் "சித்திரத்தில் மலர்ந்த செந்தாமரை மலர் போன்றிருந்தது". மனதை ஒருவாறு தேற்றிக்கொண்டு எனக்குவந்த கடிதத்தைப் பிரித்துப் பார்த்தேன். என் ஆசைக்காதலியின் அன்புக்கரங்களால் எழுதிய எழுத்துக்கள் அதில் பொறிக்கப்பட்டிருந்தன. "துன்பம் நேர்கையில் யாழெடுத்து நீ இன்பம் சேர்க்கமாட்டாயா?" என்ற புரட்சிக் கவிஞரின் பாடலொலி கேட்டது. பிரித்தேன். படித்தேன் அது, இது.

(9-ம் பக்கம் பார்க்க)

# அமைதி

புலவர். தில்லை முத்து சம்பந்தன்.

நீங்கள் காணப்போவது கற்பனை தழுவிய பழைய வரலாறுதான். என்றாலும் பண்பட்ட நெஞ்சத்தால் பகை கெட்ட வரலாறு. புண்பட்ட நெஞ்சத்தைப் புகைமூட்டி அழிக்காமல், எண்ணற்ற வீரர்கள் இறந்தொழிந்து போகாமல் கண்கெட்ட அரசர்க்குக் கண்ணொளி தந்து தண்ணளி செய்த வரலாறு. புறநானூறு தந்த செல்வம்.

உள்ளம மகிழ உவந்தளிக்கும் வள்ளல் பெருமான் அதியமான், மாற்றார் போற்றும் ஆற்றல் மிக்கோன். காலம் முழுதும் போர்க்கோலம் பூண்டவன். ஞாலத்துச் சிற்றரசர் சிலர் வேலெடுத்து வந்தார்கள். வாளெடுத்து அவரின வலியொடுக்கிததனது தாளெடுத்து அவர்கள்தலைமேல்வைததான். புலியென வந்தோர வலியொடுங்கி எலியெனசசென்றாகள். என்றாலும் அதியமான வென்றுடும் படையொடு நன்றுன பாசறையில் இருந்தான. வெற்றிககளிப்பினில் சுற்றித்திரிந்த காலத்து ஓர்நாள்.

## காட்சி 1.

**இடம்:-** தகடூரை அடுத்துள்ள பாசறை.

**உறுப்பினர்கள்:—** ஒற்றன். அதியமான், ஔவையார். படைவீரர்கள்.

**ஒற்றன்:-** வாழ்க அரசே! வணக்கம்.

**அதிய:-** என்ன செய்தி?

**ஒற்றன்:-** தாங்கள் இப்பொழுது தந்தை ஆயினீர்.

**அதிய:-** ஒற்று! சற்று நில்! இப்பொழுது தான் தந்தையா நான்? எப்பொழுதே ஆக்கிவிட்டனர் இந்நாட்டு மக்கள் என்னை தந்தையாக.

**ஒற்றன்:-** விந்தையன்று அரசே! வேழக் கன்றுபோல் விளங்கு மொரு செல்வனை அரசியார் பெற்றுள்ளார். ஆதலின் தந்தை யாயினீர். இதோ கடிதம்.

**அதிய:-** (கடிதம் கண்ட பின்னர்) என் பின்னர் இவ்வாட்சி ஏற்பதற்கு நான் ஓர் மகனைப் பெற்றுள்ளேன். நலம் கொழிக்கும் இந்நாட்டு நன்மழவர் குலத்தீரே! நான் சென்று கண்டு நாளை மீள்கிறேன். ஒற்று! நீ இங்கே இரு

**ஔவை-** அதியா! நானும் வருகின்றேன். செல்வோம்.

(அரண்மனைக்குச் செல்கின்றனர் அதியனும், ஔவையும்.)

## காட்சி 2.

**இடம்:—** தகடூர் அரண்மனையின் அந்தப்புரம்

**உறுப்பினர்:—** அரசி, குழந்தை, அதியமான், ஔவையார், பணிப்பெண், ஒற்றன்.

[போர் உடைகளைக் களையாமல் பார்க்கச்செல்கின்றான் குழந்தையை. ஔவையும் அவனுடன் செல்கின்றார். அதியனைக்கண்ட அரசி]

**அரசி:-** (மென்மையான குரலில்) வந்து விட்டீர்களா! நொந்திடும் உள்ளந் தேற வந்தவன் இவன் சொந்த நம்செல்வன். நாடாளப்பிறந்தவன்.

(குழந்தையை உற்றுப்பார்க்கிறான். அவனை ஔவையார் பார்த்துக்கொண்டு.... )

**ஔவை:-** அதியா! என்ன இது? இப்படியா குழந்தையைப் பார்ப்பது? அழகு தவழும் இவன் முகத்தைப் பார்த்தாலே பசிதீரும். அப்படி இருக்க இப்படிப் பார்க்கலாமா? சினக் குறியை மாற்றிவிடு.

**அதிய:-** பகைவரின் தொல்லை நினைவு வந்த எல்லை இம்மாற்றமன்றி வேறில்லை

**ஔவை:-** அதை இப்பொழுது நினைக்காதே

[குழந்தையை எடுத்து முத்தமிடுகிறான். அப்பொழுது பணிப் பெண் ஒருத்தி வந்து]

**பணி:-** அரசே! ஒற்றர் ஒருவர் அவசரமாக உங்களைக் காணவேண்டுமாம்.

(குழந்தையை படுக்கையில் வைத்துவிட்டு வெளியில் செல்லுகின்றான். ஔவையாரும் அவனுடன் செல்லுகின்றா)

**அதிய:-** (ஒற்றனை நோக்கி) என்ன செய்தி?

**ஒற்றன்:-** அநீதி! அநீதி! பகைவர் சேனை மீண்டும் வருகிறது.

**அதிய.-** (பல்லைக்கடித்துக்கொண்டு) ஆ....!

**ஔவை:-** அதியா! ஆத்திரப்படாதே. அமைதியாக இரு. நான் போர்க்களம் சென்று வருகின்றேன் இங்கு நீ தங்குக. வந்தாரை வழியனுப்புகின்றேன்; எந்தவித தொந்தரவும் இன்றி. ஒற்று புறப்படு.

குதிரை பூட்டிய தேர் போர்க்களம் நோக்கிப் புறப்பட்டுச் சென்று நின்றது.

(தொடரும்)

# தமிழ்கூறு நல்லுலகம்.

உக்கடை அ. விசுவநாதத்தேவர் B. A.

"வடவேங்கடந் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்து" என தொல்காப்பியரும், "நீலத்திரைக் கடல் ஓரத்திலே நின்று நித்தம் தவஞ்செய் குமரி எல்லை வடமாலவன் குன்றம் இவற்றிடையே புகழ் மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு" என பாரதியாரும கூறுவதை நோக்குமிடத்து, வடக்கே வேங்கட மலையையும் தெற்கே கன்னியாகுமரியையும் எல்லைகளாகவுடைய நிலப்பரப்பிற்கு, "தமிழகம்" என வரை யறுத்தனர் என்பது வெளிப்படை. தென்குமரி நீண்ட போராட்டத்திற்குப்பின் மீட்கப்பட்டது. ஆனால், வடமாலவன் குன்றம் இன்னும் மீட்கப்படவில்லை அதனால்தான் தமிழ் மக்கள் வாழும் இந்நிலப்பரப்பிற்கு, "தமிழ்நாடு" எனப்பெயரிடவில்லைபோலும்! வேங்கடமும், திருத்தணியும் உள்ளிட்ட சித்தூர் மாவட்டம் தமிழகத்தில் சேர்ந்தபின் இன்றைக்குத் தமிழ் மக்கள் வாழும் தமிழகத்திற்கு "சென்னை ராஜ்யம்" என்ற பெயரை நீக்கி, "தமிழ்நாடு" என்று அழைக்கலாம்என ஆட்சியிலுள்ளோர் கருதியிருப்பார்களோ எனக்கூட கருத இடமுண்டல்லவா?

சென்ற ஆண்டு நவம்பர்த்திங்கள் முதல் நாளில் திருத்திஅமைக்கப்பட்ட பதினொன்று மாநிலங்களும், மத்திய அரசினரின் நேர்ஆட்சிக்குட்பட்ட ஆறு நிலங்களும் ஓரளவு அந்தந்த நாட்டு மக்களின் கருத்திற்கு மாறுபடாமல் அமைந்திருக்கின்றன. பெரும்பாலும் அமைந்த மாநிலங்கள் மொழிவழியில் அமைந்த அமைப்பாகவேகொள்ளவேண்டும். சான்றாக, வங்காளம் பேசுகின்ற வங்கமும், ஒரியா மொழி பேசுகின்ற ஒரிசாவும், பஞ்சாபி மொழி பேசுகின்ற பஞ்சாபும் அத்தகையதாகக் கொள்ளலாம். மலையாளம் பேசுகின்ற மக்கள்நெடுநாட்களாகப் போராடியபோராட்டத்தால், அவர்கள் கண்ட கனவால் அமைந்ததுகேரளநாடு. தெலுங்குமொழி பேசுகின்ற தெலுங்கர்கள், நாடு சுதந்திரம் அடைய வேண்டுமென்று போர்ப்பறையை என்று அறைய ஆரம்பித்தனரோ, அன்றிலிருந்து போத்தி ஸ்ரீராமுலு நாயுடு இறப்பது வரை




புள்ளிகளின் நடுவே (க) அடையாளமிட்டிருக்கின்றவைகள் தமிழ்நாட்டுடன் சேர வேண்டியபகுதிகள். அவையாவன கேரள நாட்டில் இணைக்கப்பட்டிருக்கும் நெய்யாற்றங்கரையின் ஒருபகுதி, செங்கோட்டையின் ஒருபகுதி, தேவிகுளம், பீர்மேடு, கொச்சின் சித்தூர், ஆந்திரநாட்டிலுள்ள தமிழர்கள் பெருவாரியாக வாழும் சித்தூர் மாவட்டம்.

மாவட்டங்கள்:- 1. நீலகிரி. 2. கோவை, 3. சேலம், 4. வடஆர்க்காடு, 5 செங்கல்பட்டு, 6. தென்னார்க்காடு, 7, திருச்சி, 8. தஞ்சை, 9, மதுரை, 10. இராமநாதபுரம், 11 திருநெல்வேலி; 12. கன்னியாகுமரி.

யிலும்அவர்களுக்கு விசால ஆந்திரம் நெஞ்சத்தின் முன் நின்று நிலவியது. விசால ஆந்திரத்தையும் விரைவில் பெற்றனர்.

கல்தோன்றி மண்தோன்ருக் காலத்துக்கு முன்தோன்றிய மூத்த குடியான தமிழினம், தன்னுடைய நிலப்பரப்பை இழந்துகொண்டே வந்திருக்கின்ற நிலையை எண்ணும்போது, நெஞ்சம் புண்ணுகிறது. இன்றுள்ள ஆஸ்திரேலியா, சுமத்திரா, ஜாவா, இலங்கை இவைகளை உள்ளிட்டதும் ஆப்பிரிக்கா கண்டத்திலுள்ள மடகாஸ்கரையும் தன்னகத்தேகொண்டே ஒருமாபெரும் நிலப்பரப்பான குமரிக்கண்டத்தையும் கடல் கொண்டது. பஃறுளியாரும், இடைச்சங்கமிருந்தகபாடபுரமும் கடலில் ஆழ்ந்தன. இளந்துறவி இளங்கோ யாத்த சிலப்பதிகாரம் எழுதுவதற்கே முதல் அடிப்படையாயிருந்த காவிரிப்பூம்பட்டினமும் கடலில் ஆழ்ந்தது. ஆனல், தமிழிலே பிறந்து, தமிழகத்திலே வளர்க்கப்பட்ட ஆந்திர, கேரள, கன்னட மொழி மக்கள் எஞ்சியுள்ள தமிழ்ப்பகுதிகளை கொள்ளையிட்டுக் கொண்டேயிருக்கின்றனர். இளங்கோவடிகளுடன்செங்குட்டுவனும் மலைவாழ் மக்களின்வாயிலாக உயிர் நீத்த உத்தமி கண்ணகியின் வரலாறு கேட்ட இடம் பெரியாற்றங்கரை. அம்மலை மிகு பெரியாற்றங்கரையையும் இழந்தோம்.

சேர, சோழ, பாண்டியர்களின் ஆட்சிக்குப்பின் தமிழகம் பல்லவர்கள்—விஜய நகர நாயக்கர்கள்—முகம்மதியர்கள்—சுல்தான்கள்—மராட்டிய மன்னர்கள்—ஆட்சிக்குட்பட்டு பல இன்னல்களையும் அடைந்தது. அதன்பின் கடல்கடந்து வணிகத்திற்காக வந்த ஆங்கிலேயரின் ஆட்சியிலிருந்த பொலிவையும் இழந்தது. நம் நாட்டிற்குச் சுதந்திரம் கிடைத்த நாள் முதல் உயிர் கொடுத்த மாவீரர் சங்கரலிங்க நாடார் காலம் வரையிலும் "தமிழ்நாடு" என பெயரிடாமல் இருப்பது, தமிழ்கூறு நல்லுலகத்திற்கு மாபெரும் இழுக்கேயாம். பெற்ற தாயும் பிறந்த பொன்னுடும் நமக்கு நனி சிறந்ததல்லவா?

★

## திங்களின் தோற்றம்.

வித்துவான் திரு. அடிகளாசிரியர்
விரிவுரையாளர், கரந்தைப் புலவர் கலலூரி.

★

அச்சமும் கவலை தானும்
அழித்திடு சினமும் இன்றி
நிச்சமும் நகைத்து வாழும்
நிறைமதி யாளன் போல
கச்சமில் வானம் தன்னில்
கலைநிறை மதியந் தானும்
எச்சமில் நிலவை வீசி
எழுந்தது மகிழ்ச்சி தோன்ற.

5-ம் பக்கத்தொடர்ச்சி

அன்புள்ள அத்தான் அவர்கட்கு,

தங்களிடமிருந்து கடிதம் வரும் வரும் என்று எதிர்பார்த்தேன். ஏமாந்தேன் எழுது கிறேன். நம்வாழ்வு "தமிழ்ப்பொழிலாக" இருக்குமென்று எதிர்பார்த்தோம். ஆனால், புயலடித்தபகுதியாக மாறிவிட்டது அத்தான்! மாறிவிட்டது. நான் இப்பொழுது எங்கள் இல்லத்து அறையில் பூட்டிவைக்கப்பட்டிருக் கிறேன் என் தயாரால். வருகிற திங்கள் எனக்குத் திருமணம். இஃது என் அம்மா வின் மதியால் ஏற்பட்ட சதி. காரணம் நான் தங்களுடன் ஓடிவந்து கூடி விளையாடுவே னும். இதற்கு மேல் எனக்கு எழுதத் தெரிய விலலே. முடிக்கிறேன்.

உங்கள்,
மலர்க்கொடி.

"உடனே ஊருக்குப் போகவேண்டும் ஊருக்குப்போகவேண்டும்என்றுதுடித்த என் உள்ளத்திற்கு மறுப்புகூற முடியாத காரணத் தினல் ரயிலேறி தஞ்சை வந்தேன். மலரைக் காணவேண்டும் நுகரவேண்டும் என்ற ஆவலோ சொல்ல முடியவில்லே. பழைய தோற்றங்கள் பழையகாட்சிகள்எல்லாம் முன் பின் முரணுகாதவாறு என் மனத்திரை முன் தோன்றுவதும் மறைவதுமாகவே இருந்தன. "அத்தான்! அத்தான்!" என்று அலறிக் கொண்டே வந்தாள் மலர்க்கொடியாளின் உடன்பிறந்தாள். "மலர்க்கொடி என்ன சொன்னுள்? என்னே வரச் சொன்னுளா? எங்கு வரச்சொன்னுள்? எந்த இடத்திற்கு வரச்சொன்னுள்? சீக்கிரம் சொல் கமலா!" என்று கேட்டுக்கொண்டே சென்றேன். "அக்கா அழுதுகொண்டே இருக்குது. சாப் பிடமாட்டேங்குது" என்றுள்.

"மலர்க்கொடிக்குத் திருமணமாமே!"

"ஆமாம்!"

"மலர்க்கொடி என்னேப்பற்றி உன் பெற் ருேரிடம் ஏதாவது சொன்னுளா?"

"அக்கா சொல்லிற்று உங்களேத்தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று. அம்மாதான் நீங்கள் வேறு சாதியாம் அன்றி யும் நீங்கள் ஏழையாம். ஆதலால்...... ......."

"அதற்குமேல்!" என்றல் ஒன்றுமே செய்ய முடியவில்லே. விடிந்தால் திருமணம். மணி பத்தாகிவிட்டது. பத்துமணிக்குள் திரு மணம் என்றிருந்தது எனக்கு வந்த அழைப் பிதழில். மனத்திரையிலே புரையோடி விட்டி ருந்த அந்த எண்ணக்கோடடுக்கு—பயங்கர ரேகைக்கு முற்றுப்புள்ளி வைக்க என் மனம் துடித்தது. துடிப்புக்கேற்ற செயலில்லே என் னுடலில். எங்கள் பாசக்கயிற்ருேடு மறுநாள் ஏறப்போகும் மங்கலக்கயிறுபோட்டியிட்டது. "ஆனல் அதே மஞ்சள்நாண் என் கையால் ஏறியிருந்தால்...?" வீண் எண்ணம் என் றெண்ணினேன். அமைதி காண ஆவலோடு ஏங்கினேன்.. சிந்தித்தேன்! சிந்தித்தேன்! என் அன்புக்காதலிக்கு என்ன பரிசுகொடுக்க வேண்டுமென்று. ஓடினேன் கடைவீதிக்கு. பச்சை நோட்டுகள் கைமாறின. திரும்பி னேன் வேகமாக. இரவை எப்படியோ ஒரு வழியாகக் கழித்தேன்.

மறுநாள்! மங்கலகரமான நாள்! ஐதீகர் களின் கையிலகப்பட்ட அருமையான நாள்! ஜோசியர்கள் குறித்த சொர்ணமான நாள்! எங்கள் இன்ப வாழ்விலேற்பட்ட ஒருபெருந் துக்கநாள்! மணவாயிலில் நுழைந்தேன். ஆனல்! என் அந்தரங்கம் சவக்குழியின் பிளவு வாயிலில் நுழைவதுபோன்ற உணர்ச் சியைக் கொடுத்தது. ஐயர் மந்திரம் ஓத— கெட்டிமேளம் கொட்ட—சடங்குமுறையோடு எல்லாம் நடக்க வேண்டிய கட்டத்தில்.. .... நான் அங்கே தோன்றினேன். என் கண் க்ளில் கண்ணீர் பெருக்கெடுத்தது. ஆனல் என் இதயத்திலே இரத்தவெள்ளம் ஓடஆரம் பித்தது. என்னேயே என்னல் நம்ப முடிய வில்லே. அங்கே அருமையான ஆசனத்தில் அந்த அழகுராணி, என் இன்பப்பெட்டகம் அமர்ந்திருந்தாள். அவள் நிமிரவில்லே. நான் தலேகுனிந்தேன் அந்தக்காட்சியைக் காணச் சகிக்காமல்.

நேரம் நெருங்கிவிட்டது. இதோ! ஐயர் மாங்கல்யத்தை மணமகன் கையில் கொடுக கிருர். ஐயோ! இந்தக்காட்சியை நான் பார்த் துக்கொண்டிருக்கவா வேண்டும்? வேறு வழி

(12ம் பக்கம் பார்க்க)

# ★ பரிசு ★

( திருமாவளவன். )

கி. பி. 1303. அப்பொழுது டில்லியின் மன்னர் மன்னனாக விளங்கியவன் அலாவுதீன் கில்ஜி. சித்தூரையும் ஜெயசல்மீரையும் வென்று அவன் வாகை சூடிய நேரம்.

அரண்மனைப் பூங்காவிலே உலவிக்கொண்டிருந்தான் கில்ஜியின் மகன் முபாரக். அவன் ஏதோ தீவிரமான சிந்தனையிலீடுபட்டிருந்தான். "இளவரசே!" என்றகுரல் அவன் சிந்தனையைக்கலைத்தது. "மாலிக்காபூர்! என்னசெய்தி?" "செய்தி ஒன்றுமில்லை, இளவரசே! நம் சாம்ராஜ்யத்தைப் பெருக்க தக்காணம் வரை படையெடுத்துப் போகிறேன். இந்தசமயத்தில்..........." "என்ன மாலிக்! உன் தோழனாகப்பழகிய என்னிடம் ஏன் தயக்கம்!" "தயக்கமில்லை மகராஜ்! தைரியமாகச் சொல்லலாமல்லவா?" "சொல் மாலிக்! சொல்!" "எனக்கு நீண்ட நாட்களாக ஒரு ஆசை. விரைவில் வெற்றியோடு திரும்பப்போகும் என்னை தங்கள் தங்கை இளவரசி ஜெனியாபேகம் மாலையிட்டு மணந்துகொள்ள ..............." "என்ன மாலிக்! உளறுகிறாய்! நடக்கக்கூடியதாகப் பேசு!" "இளவரசே! தாங்களே இப்படிச்சொன்னால்.................." "இதனால் விபரீதம் விளையும்! மாலிக்"

மாலிக்காபூர் மன்னன் மகன் காதில் ஏதோகூறினான். "புரிந்துகொண்டேன் மாலிக்! புரிந்துகொண்டேன். உன் முயற்சியில் வெற்றிபெற்றுவா! பிறகு மற்றவற்றை பேசலாம்." மாலிக்காபூர் வெற்றிப்புன்னகையுடன் வெளியேறினான்.

சிங்கத்தின் கர்ஜனையும், சீறும்புலியின் உறுமலும், ஓநாய்களின் ஓலமும் அந்தக் காட்டில் எதிரொலித்தன. பகலிலேயே இருண்டுகிடக்கும் அந்தத்தேவகிரிகாடு அந்நள்ளிரவில் அதிபயங்கரமாகக் காட்சியளித்தது. ஒரு மனித உருவம் தலையிலே முக்காடிட்டு ஓடிக்கொண்டிருந்தது! அடிக்கடி அந்த உருவம் நின்று, பதுங்கிப் பதுங்கிப் போய்க்கொண்டிருந்தது. தடாலென்ற மோதலுடன் அந்த உருவம் கீழேவிழுந்தது.

"அரசே! நீங்களா!" மோதிக்கொண்ட உருவங்களிலே ஒன்று பேசியது "ஜெகந்நாதா! இரையாதே!" "அரசே! நாம் வெகுதூரம் வந்துவிட்டோம்!" "எதற்கும் எச்சரிக்கையாக இருக்கவேண்டும்!"

அவர்கள் ஓடிக்கொண்டிருந்தார்கள். ஒரு பெரிய மலை. அதன் அடிவாரத்தில் வந்து தங்குகிறார்கள். "அரசே! வாரங்கல் அரசர் விஜயசிம்மர் உங்கள் தந்தையை முறியடித்தபோது அவரும் நானும் இப்படித்தான் ஓடிவந்து இந்த மலைக்குகையில்தான் தங்கியிருந்தோம். காலையில் குகைவாசலைக் காட்டுகிறேன்."

தேவகிரி அரண்மனையை கில்ஜியின் தளகர்த்தன் மாலிக்காபூர் தன்படைசூழ ஆக்கிரமித்துக்கொண்ட அதேநேரத்தில், அவனிடம் தோற்றோடிய தேவகிரி அரசன் இராமராயனும், தளபதி ஜெகந்நாதனும் தேவகிரிகாட்டிலிருந்த பவளமலைக்குகையில் நுழைந்தார்கள்!

டில்லி சாம்ராஜ்யத்தின் தனிப்பெரும் அரசன் அலாவுதீன் கில்ஜியின் அந்தப்புரம். "அப்பா" "என்னம்மா" "நான் ஒன்று கேட்கிறேன் கோபிக்கமாட்டீர்களே!" "என்னம்மா இப்படிக் கேட்கிறாய்? தாயற்ற உன் விருப்பத்திற்கு மாறாக எப்பொழுதாவது நடந்திருக்கிறேனா!" "அப்பா! நான் ஒருமன்னரைக் காதலிக்கிறேன்! அவருக்கு என்னை மணம் முடித்து வைக்கவேண்டும்" "யாரம்மா உன் மனங்கவர்ந்த மணாளன்?" "உங்களிடம் தோற்று இப்பொழுது சிறையிலிருக்கும் ஜெயசல்மீர் ராஜ்ய அரசர் அமீர்சந்த்!" "அமீர்சந்த்! அவனா உனக்கு வரப்போகும் கணவன்! ஹா....ஹா....ஹா....கனவிலும் நடக்க முடியாதது!"

அவள் அழுதாள்! அரற்றினுள்! விம்மினுள்; விழுந்து புரண்டாள்! வேதனைதான் அதிகமானதே தவிர வேந்தனின் மனம் மாறவில்லை!

அலாவுதீன் கில்ஜியின் கொலுமண்டபம் அன்று மகிழ்ச்சி நிறைந்த மக்கள் கூட்டத்தால் நிறைவுற்றிருந்தது. மன்னன் பேசினுன் "மாலிக்காபூர்! நீ சென்றுவந்த செய்தி என்ன?" "அரசே! தேவகிரி, வாரங்கல், துவாரசமுத்திரம் ஆகிய நாடுகளைத் தங்கள் சாம்ராஜ்யத்துடன் இணைத்துவிட்டேன். ஆனுல் தேவகிரி மன்னன் தப்பிவிட்டான்" "ஓடிவிட்டான், உயிரைப் பெரிதெனக் கருதிய கோழை! போகட்டும்! பிழைத்துப் போகட்டும்!........ சரி, உனது வெற்றிககுத் தகுந்த வெகுமதி தருகிறேன், வேண்டியது கேள்!" "அரசே! நான் விரும்புவது பொன்னும், மணியும், பட்டும், பவளமுமல்ல! பொன்னைவிட அழகானவள்—மணியைவிட ஒளியானவள்—பட்டைவிட மி ரு து வா ன வள்—பவளத்தைவிடச் சிவப்பானவள்—என் நெஞ்சங்கவர்ந்த காரிகை ஒருத்தி அரசே! நீங்கள் அவளை எனக்கு மணமுடித்துவைக்க வேண்டும்!" "சரி! அந்தப்பெண்மணி யார்?" "இந்தநாட்டு இளவரசிதான் மன்னவா! தங்கள் குமாரி ஜிஸியாவைத்தான் குறிப்பிடுகிறேன்."

"என்ன சொன்னுய்! தூர்த்தனே! துன்மார்க்கனே! எங்கோகிடந்தவனை இங்கே கொண்டுவந்து நல்லுணவளித்து நாடுபிடிக்கும் வேலையும் தந்தேன். அறிவு கெட்டவனே! என் மகள்—டில்லி சாம்ராஜ்யபதியின் மகளா உனக்கு நாயகியாக வேண்டும்! என்ன துணிச்சல்! ஏய்! யாரங்கே! ஏன் நிற்கிறீர்கள்! இந்த சிறியவனைக்கட்டிச் சிறையிலடையுங்கள்!" மன்றம் கலைந்தது! மன்னன் ஆணை நிறைவேறியது!

மன்னர் மன்னன் அலாவுதீன் கில்ஜி முகம் கறுத்தது, அவன் மீசை துடித்தது, அவனது உள்ளக் கொதிப்பிற்குக் காரணம் 'மாலிக்காபூர்' தப்பிவிட்டான் என்ற செய்திதான்!

"அரசே!" "என்ன?" "மாலிக்காபூர் இராமராயனுடன் சேர்ந்துகொண்டு இங்கு படையெடுதது வருகிருனும். இளவரசரும அவர்களுக்குத் துணைபோயிருக்கிருர்! " என்ன, அப்படியா? துரோகிகள்!என்னிடம் வாள்பிடிக்கக் கற்றுக்கொண்டபயல்கள் என்னையே எதிர்ப்பதா? அதையும்தான் பார்த்துவிடுகிறேன்!"

கில்ஜியின் படையும் மாலிக்காபூரின் சேனையும் கைகலந்தன. மீவார், வாரங்கல் ஆகிய நாடுகளில் மாஜி அரசர்கள் மாலிக்காபூரின் சகாக்களாக மாறியிருந்தார்கள். சிறிது நேரத்தில் வெற்றி முரசின் ஒலி டில்லிகோட்டையில் கேட்டது! ஆம்! மாலிக்காபூர் வெற்றிபெற்றுவிட்டான்!

நாடுகள் பல பிடித்த மாலிக்காபூர் கில்ஜியின் மகளைப் பிடிக்க ஓடினுன்! ஆனுல் அவள் கிடைத்தால் தானே............!

வாரங்கல் நாட்டின் வனப்பு மிக்க காட்டிலே இருவர் பேசிக்கொண்டிருந்தார்கள். "அரசே, நம்மை ஆபத்து நெருங்கிகொண்டிருக்கிறது." "ஜிஸியா! எனக்காக நீ ஏன் இவ்வளவு கஷ்டப்படவேண்டும்" "அப்படியெல்லாம் பேசாதீர்கள்!" ஆணுடையிலிருந்த ஜிஸியா, அமீர்சந்தைத் தழுவிக் கொண்டாள். குதிரைகளின் குளம்பொலிக்கேட்டு அவர்கள் விலகி ஓடினுர்கள்!

மாலிக்காபூர் ஜிஸியாவைக் கண்டுவிட்டான்! "யார் நீ" "உன்னுடைய பகைவன்!" கத்திகளின் ஒலி கேட்கவாரம்பித்தது. சிறிது நேரத்தில் "ஆ! அம்மா!" என்ற அவலக்குரலுடன் கீழே விழுந்தாள் ஜிஸியா! "ஆ! இளவரசியா!" ஆச்சரியத்தால் வாயைப் பிளந்தான்மாலிக்காபூர்!

இராமராயனுக்கும், முபாரக்குக்கும் விரும்பிய பரிசுகள் கிடைத்தன. ஆனுல் மாலிக்காபூர் விரும்பியபரிசு அவனுல் எட்டிப் பிடிக்க முடியாத இடத்திற்கு ஓடிவிட்டது!

---



---

9ம் பக்கத்தொடர்ச்சி

யில்லை. மூன்று முடிச்சுகள் போட்டான். சித்திரப்பாவை அசையவில்லை. மரத்துவிட்டிருந்த அவள் உடலில் உணர்ச்சியில்லை. இப்போது அவள்மனைவி! இல்லை. மனைவி என்ற இடத்தில் அடக்கம் செய்யப்பட்டு விட்டாள். என் மலர்க்கொடி அல்ல அவள்! மனைவியெனும் மயானத்தில் மாய்ந்துவிட்டாள். கைபிடித்த கணவனின் கண்ணிலே கலகலப்பு, முகத்திலே மகிழ்ச்சி. ஆனால், என்னுடைய உள்ளக்குமுறலை அவன் எப்படி அறிவான்? பரிசு கொடுக்க வேண்டிய நேரம் நெருங்கியது. நானும் என் அன்பை எடுத்துக் கொடுத்தேன். ஒருவர் என் பெயரைச் சொல்லி. "இந்தப் பொன்மாலை மணமகளுக்கு அன்பளிப்பாக அளிக்கப்படுகிறது" என்றார்.

என் காதலி, இல்லை இல்லை! தொட்டில் பழக்கம்.என்னசெய்வது. அந்தமணமகள்என் பெயரைக்கேட்டவுடனே திடீரென்று நிமிர்ந்தாள். என் கண்களும் அவளது ஒளியிழந்த கண்களும் சிறிது நேரம் உறவாடின. சிறிது நேரம்தான். மீண்டும் நான் சமாளித்துக் கொண்டு நோக்கத்தைத் திருப்பினேன். ஆனால் அவள்கண்களில் வழிந்த கண்ணீரை மாற்றமுடியவில்லை. மல்கிநின்ற அந்தக்கண்ணீரால் தன் நன்றியைத் தெரிவித்துக்கொண்டாள்.என்பரிசுக்குக் கிடைத்தபரிசுகண்ணீர். அதையே காணிக்கையாகக் கொடுத்தாள்.

ஆம்! கண்ணீரைக் காணிக்கையாக வைத்தாள் அந்தக் கற்புக்கரசி. திடீரென்று விழித்தேன். என் கடந்தகால நினைவுகளின் பயங்கரம் அந்தப் பிரேத நிசியில் மேலும் ஒரு விகாரத்தை என்னுள்ளத்தில் ஏற்றி விட்டுக்கொண்டிருந்தது.



15—11—56 அன்று காலஞ்சென்ற நாவலர் பண்டிதர் ந. மு. வே. நாட்டார் அவர்களின் தம்பி திரு. ந. மு. கோவிந்தசாமி நாட்டார் அவர்களின் 60-ம் ஆண்டு நிறைவுவிழா நடைபெற்றது. வாழ்க நாட்டார் தம்பதிகள்!!!

# கடமை தவறேல்.

என். அப்புசாலி.

மனிதவர்க்கம் தொன்றுதொட்டு இன்றைய அணுக்குண்டு யுகம்வரையிலும் முன்னேறியிருக்கின்ற முன்னேற்றம் மிக அதிகம். ஒவ்வொரு மனிதனும் நொடிக்கு நொடி விஞடிக்குவிஞடி சிந்திக்கிருன், செயலாற்றுகிருன். ஆற்றுகின்றசெயல் நன்மையாகவோ அல்லது தீமையாகவோ உருவெடுக்கும். இந்நில உலகத்தில் சிந்தித்து செயலாற்றுகின்ற தன்மை சாதி, மத, நிற, இன வேறுபாட்டின் அமைப்புக்களைக் கடந்ததாகும். நன்மைபயக்கின்ற சமயத்தில் ஒருசாதி மற்ருெருசாதியையும் ஒரு இனம் இன்ஞெரு இனத்தையும் ஒரு நிறத்தவர் பிறிதொரு நிறத்தவரையும் ஒரு மதத்தினர் அடுத்த மதத்தினரையும் தடைப்படுத்துவது அல்லது செயலாற்றி இதர கோட்பாடுகளாலே, மிஞ்சவிடாமல் தடுப்பது இன்றைய உலக நீதியாகிவிட்டது.

மேற்கூறியவைகளெல்லாம் உலகத்தில் உருவெடுத்து உலாவிவருதைப் பார்த்தால் தனி ஒரு மனிதன் பிறிதொரு மனிதனை தெளிவற்ற முறையில் சந்தேக கண்ஞேட்டத்தோடுதான் பழகவேண்டும் போலும். மனிதன் நாகரீகத்தாலும், விஞ்ஞானத்தாலும், அறிவு விசாலமாகிவிட்டான் என்று சொன்ஞலும்கூட பண்பிழந்து நரகவேதனை அடைகின்ற அவலநிலையை எட்டிப்பிடிக்க முயலுகிருன். பிற்பட்ட மக்கள் எல்லா வகையிலும் பிற்பட்டே வாழ்கின்றனர். இந்த நாட்டில் ஆங்கில ஆட்சி ஆண்டுகொண்டிருந்த காலத்தில் இந்நாட்டையே சுரண்டி அவர்கள் முன்னேறினர். ஆங்கிலேய ஆட்சி அகன்றபின் சுரண்டல் தன்மை ஒழிக்கப்படவில்லை. சாதிமத, இன, இராச்சிய உருவங்களில் இந்தநாட்டு மக்களை சுரண்டலில் சிக்க வைத்திருக்கிறது. எலும்பும் தோலுமாய் காட்சியளிக்கின்ற இந்நாட்டிலுள்ள ஏழுலட்சம் கிராமவாசிகளும் பெரும்பாலும் பிற்பட்ட நிலையிலேயே வாழ்கின்றனர். உண்ணுவதற்கு உணவில்லாமலும், படுப்பதற்கு பாய் இல்லாமலும் தவிப்பதோடல்லாமல் விவசாயத்திற்குபோதிய நிலமில்லாமலும் விவசாயக் கருவிகள் போன்ற உபகரணங்கள் இல்லாமலும் அவதிப்படுகின்றனர். பணநெருக்கடியும் காலாகாலங்களில் மழை பெய்யாமையும் நவீனமுறையில் விவசாயம் செய்ய அவர்களுக்கு போதிய ஆதரவு அரசாங்கத்தினின்றும் கிட்டாமையும்தான் அவர்களின் ஏழமை முற்றிபிற்பட்டநிலையில் அவர்களைக்கொண்டு விட்டிருக்கிறது.

பொருளாதாரத்தில் மிகவும் பின்னடைந்திருக்கும் பிற்பட்டமக்களின் நிலையை சீர்திருத்தாவிட்டால் நாட்டின் நிலைமை சிக்கலுற்றுமிகவும் கீழானநிலையில் சென்றுவிடும் என்பது உறுதி. ஆகவே பிற்பட்ட மக்கள் சீரும் சிறப்புடனும் வாழ வேண்டுமாஞல் ஒற்றுமை மிகமிகதேவை. அவர்களின் ஒன்றுபட்டகுரல் திக்கெட்டும் முழங்க சாதி, மத, இன வேறுபாடின்றி ஒத்துழைக்கவேண்டும். கருமமே கண்ணுயிருந்தால் தான் காரியம் கைகூடும். பிற்பட்ட மக்களுக்கென சட்டசபை உறுப்பினர்களும் தேவை. இவர்களின் நலனை கவனிக்க தனி இலாக்காவும் மத்திய அரசாங்கங்களில் வேண்டும். எனவே பிற்பட்டமக்கள் ஒன்றுபட்ட ஐக்கிய சக்தியுடன் தங்களுடைய எதிர்காலத்தில் இன்புடன் வாழ திட்டம் தீட்ட கங்கணம் கட்ட வேண்டும். காலம்தாழ்த்துவது கடமையில் தவறுவதாகும். கடமையில் தவறிஞல் உடைமைக்கு உலைவைப்பதாகும்.

# வழி ஒன்றே உண்டு!

கு. சிவமணி B. A. Hons.

ஈடில்தமிழ் மானத்தை இகழ்ந்துரைக்கக் கேட்டே
இனமானம் காப்பதற்கு வெகுண்டெழுந்து சென்று
சாடிப்பகை முறியடித்துத் தமிழ்வீரம் காட்டி
சாக்காட்டில் முரசறைந்த திருநாளும் உண்டு!
ஓடிஒளி பேடிகளை மன்னரெனக் கொண்டு
உயர்தமிழர் விரிநெஞ்சம் உணர்த்தியநாள் உண்டு!
தேடிவந்த பகைவரையும் கேளிரெனக் கொண்டு
தீரத்தால் தமிழகத்தை ஆண்டநாளும் உண்டு!

மலைவடக்கும் கடல்தெற்கும் எல்லைகளாய்ப் பண்டு
மாவேந்தர் ஆண்டநாளில் திகழ்ந்ததுமே உண்டு!
அலைகடலின் வலிவடக்கிக் கலமோட்டிச் சென்று
அடங்காதார் மிடல்கொன்று வெற்றிமாலை கொண்டும்,
மலைமடியில் புலிகயல்வில் அடையாளம் பொறித்தும்,
மாற்றலர்தம் மணிமுடிகள் அடிதொடவே இருந்தும்,
நிலைமண்ட நிகழ்ச்சியெலாம் கலைகனவாய் மின்னும்!
நெஞ்சிலெஞ்சும் இன்றுவாழும் இழிநிலையே என்றும்.

நாடுமொழி இனம்மேலே விழிவைத்துக் காத்தார்
நாவடக்க மறந்தார்க்கு நல்வழிகற் பித்தார்,
ஆடுகலை பண்ணியலை ஆவியெனக் கொண்டு
அடிபணிந்து முடியுடையார் தொண்டுபல செய்தார்,
நீடுபுகழ் தமிழ்வாழ அவர்வாழ்ந்தார் நன்றே!
நிலைமாறித் தமிழ்வீழ நாம்விழ்ந்தோம் இன்றே!
வாடுநிலை ஓடுதற்கு வழிஒன்றே உண்டு
வாய்க்கவேண்டும் நல்லாட்சி நமக்குநாமே கொண்டு!

# போராட்டம்

பொன்னிவளவன்.

கோட்டான் கூவிற்று. கோலவானக் கொண்டல் அவனுடலிற் சிலதுளி தூவிற்று. கொடிபடர்ந்த இடிவிழுந்து பொடிபடிந்து குலைந்து கிடந்த அந்த மண்டபம் அவனது உல்லாச அரண்மனை! கோட்டானின் கூவல் அவனுக்குக் கோலக்குளிர்பொழிலின் கோகிலக் குரலோசை! வானத்தின் தூற்றல் அவன் வரவேற்கும் பன்னீர்! ஏனத்தில் அவனெடுக்கும் எச்சிச்சோறு இன்சுவை உணவு! அதோ!.........அந்தப்பாறை....... .... அதுதான் அவனுடைய அரியாசனம்! தூணோரத்திண்ணை தூங்கி எழும் தங்கக் கட்டில்!

கொஞ்சும் மழலைமொழிக் குழவிகளை—அஞ்சுகம் நிகர்த்த அவனது அன்பினளை—நெஞ்சு பதைபதைக்க நீளாற்றில்சாகவிட்டுப் பஞ்சம் அடைந்து பஞ்சடைந்த கண்ணோடு அவன் வெளிவந்தபின் மறைந்த நாட்கள் கொஞ்சமல்ல; அந்நாளெல்லாம் அவன் ஆண்டஅரண்மனை அந்தப்பாழடைந்தமண்டபம்தான்! அந்தநாட்களில்"அரியலூர் அருகே ரயில் விபத்து—அந்த ஆற்று வெள்ளம்—அனுப்பிய ஆஸ்பத்திரி—கல்லக்குடி"—எதையாவது எண்ணிப்பார்த்திருக்கிறானா இது வரையில்? கிடையாதே! செத்துமடிந்த அவனுடைய முத்துநகையாளை—தத்துங் குழவிகளை எத்தனை நாள் எண்ணினான்? அத்தனையும் இப்பொழுது அழிந்துவிட்ட பழங் கனவு.

உன்மத்தம் பிடித்து ஊரெல்லாம் அலைந்தவனை "வாவென்று வரவேற்று வந்தது போல் போ" வென்று சொல்லி பொருள் கொடுத்த சென்னை கீழ்ப்பாக்கம்—பாவம்! அவன் அதை எல்லாம் நினைத்தானா? எங்கே போவான் அவன்? அவனோ 'வளங்கொழித்த தமிழ் நாட்டான்' அதுவும் அப்பகுதிகளில் அன்றுடக் கூழ் காய்ச்ச முதலாளிகளிடம் காசுக்கு மன்றாடிக்கொண்டிருந்தவன். எங்கேனும் சென்றோடிப் பிழைக்கலாம் என வந்த நேரத்தில்தான் அந்த அரியலூர் ரயில் விபத்து...............! அதை எல்லாம் அவன் இப்பொழுது நினைக்கவில்லை. "காலை பிறந்தால் கையில் திருவோடு; கவளம் கிடைத்தால் முடிந்தது என்பாடு" என்றுதானே காலங்கடத்திக்கொண்டிருந்தான்? ஆனால்....

*       *       *       *       *       *

"அவன் தலையிலே இடிவிழ. பாழாய்ப் போறவன். ஏழைபாழைங்க வயித்துலயா மண்ணு போடனும்? அவன் கண்ணவிஞ்சு நின்று திராவ! அவன் பிள்ளைகள திங்க... !"

இந்தப் பொல்லாத சாபங்கள்............... அவன் உள்ளம் படாதபாடு பட்டது. "இல்லாதவர்கள் வீடா?" அவன் என்ன என்னவோ எண்ணினான். இதயம் நடுங்கியது.

"நில்லாதே! போண்ணே! திருடத் தெரிஞ்சா போதுமா? தெத்தத் தெரியனும்!"

எதிரிலே புதர் சலசலத்தது. இரண்டு உருவங்கள் எழுந்து நடந்தன. வந்த வார்த்தைகள் அவனுடைய இதயத்தைத் தொட்டன.

"தெத்தத் தெரியனும்" அவன் வாய் முணுமுணுத்தது. "சீ! நான் சுத்தமடையன்" அவன் வேகமாகவே பேசினான். உள்ளப் போராட்டம் உதடுவரை கொண்டுவந்து விட்ட வார்த்தைகள் இவை.

அவன் கையிலேஎடுத்தான் ஒருசுருட்டு. பயங்கரமான இருட்டு. அதிலே அவன் நடத்தும் முதல் திருட்டு—அதுவும் ஏழைகள் வீட்டிலே! "எவனுக்கு சேர்த்துவைக்க நான் திருடினேன்? ஓடெடுத்து வருகின்ற உணவெடுத்து என் உடல் வளர்த்துக் கொண்டிருந்தால்போதாதா? ஐயோ! நான் ஒரு மட்டமான விலங்கு. ஆனால் அவர்களுக்கு அது எத்தனை பெரிய சொத்து. பாடுபட்டவர்களுடைய பணம் கேடுகெட்டவன்... .......சீ! சீ! ...........அவனுடைய உடல் ஆடிற்று. உதடுகள் நடுங்கின.

எழுந்து நடந்தான். அந்த வீட்டிற்குப் பக்கத்தில் சந்து. அவன் பசித்த வயிறு புசித்ததுபோக மீதி இருந்த ரூபாய் மூன்று, சத்தப்படாமல் வீட்டிற்குள் போட்டான். வந்த வழியே நடந்தான், அதே பாழும் மண்டபம். அதே அரசாட்சி மீண்டுமா?

"காயமே இது பொய்யடா" அந்தப் பிச்சைக்காரப்பாட்டைக் கடைசி முறையாகப் பாடினான்; உரக்கப் பாடினான்; உற்சாகமாகப் பாடினான்; விடிய விடியப் பாடினான்! மேகம் வலுத்தது; மழை பலத்தது, இடி இடித்தது வானிலே போராட்டம்—வையமெல்லாம் நீரோட்டம். அரசமரத்தை உரசிக்கொண்டு ஆந்தை பறந்தது. அது அலறிய அலறல்.... ..அமைதி பறந்தது. தொம்மென்ற சத்தம் மீண்டும் இடி........மழை........மின்னல்...........சுழல்—வானிலே போராட்டம் அந்த அனுதையின் உள்ளத்தில் நிகழ்ந்த போராட்டத்தைப்போல!

* * * * * *

பொழுது விடிந்தது மண்டபம் மதிப்பிற்குரிய மன்னனை இழந்த துயரை அறிவிப்பது போல மேலும் இடிந்து கிடந்தது. மண்டபத்தின் எதிரே அவனுடைய பிணம்.... ...கழுத்திலே கட்டிய துண்டு அறுந்த நிலையிலே ..! யாரோ ஒரு பெரிய மனிதர் அந்த வழியே வந்தார். "நாதியற்ற கழுதை!" என்று அவருடைய வாய் முணுமுணுத்தது. எங்கோ ஒரு கழுதை கத்தியது. அதைக்கூட வண்ணன் தேடுவான். ஆனால் இந்தப் பிணத்துக்கு நாதி.......................?

# பொய்யில் புலவனின் மெய்யுரை.

(மதுரை அழ. இலக்குமணன்)

"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ் நாடு" என்பது அமரகவி பாரதியின் வாக்கு. இத்தனிப்பெருமை வாய்ந்த தெய்வப் புலவரின் வரலாற்றையும், அவரியற்றிய இறந்த காலம், நிகழ் காலம், எதிர்காலம்—எனும் மூன்றினுக்கும் ஒத்ததான பொய்யா மொழி திருக்குறளைப் பற்றியும் செவ்வனே அறியவேண்டியது நமது கடனாகும்

திருவள்ளுவரது தாய், தந்தையர் முதலியவரைப்பற்றிச் சரிவர ஒன்றும் தெரியவில்லை. ஒருசாரார் தங்களுக்குச் சாதகமான முறையில் கூறிக்கொண்டாலும் இஃது இன்னும் ஆராய்ச்சிக்குரிய செய்தியாகவே இருக்கிறது. இவர் கி. மு 2 ம் நூற்றுண்டில் அந்நாளில் சென்னையில் செம்படவர் கிராமமாயிருந்த மயிலையில் தோன்றினர், இவரது பெயர்க் காரணமென்ன என்பது இன்னும் புலனாகவில்லை. இவர் வள்ளுவர் மனையில் வளர்ந்து வந்தவரென்று கூறுவர்; ஆதலின் இப்பெயர் குலம்பற்றி வந்ததென்பர் பழைய உரையாசிரியர் சிலர். அஃது இயற்பெயரெனக் கொண்டனர். வள்ளுவரென்பது தொழில் பற்றி வந்த பெயரென்றும், அரசர்க்குரிய கருமத் தலைவரென்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர். இவர் நெசவுததொழிலைக்கைக் கொண்டிருந்தார். நல்லொழுக்கங்களும், அறிவும், கற்பும் ஒருங்கே யமைந்த வாசுகியமமையாரைத் தனது இல்லக்கிழத்தியாக அடைந்தார். இவரது மதம் இன்னதென்று புலனாகவில்லை. ஏனெனில், இவரது திருக்குறள் எல்லா மதத்தினருக்கும் ஒத்த முறையில் அமைந்துள்ளது. ஆயினும்,

" அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு "

"ஐந்தவித்தான் ஆற்றல் அகல் விசும்புளார்
கோமான் இந்திரனே சாலுங்கரி"—முதலிய குறட்பாக்களினல் இவர் இந்து மதத்தவர் என யூகிக்கலாம். நிற்க.

வள்ளுவரது வரலாறு பற்றிக் கருத்து மாறுபாடுகள் பல இருப்பினும் அவரியற்றிய குறளின் பெருமை பற்றி இவண் ஆராய்வோம். அரசியலைப்பற்றி ஆசிரியர் கூறுவன தமிழர் நாகரிகத்திற்கு ஏற்றம் தருவன அரசியற் செய்திகளனைத்தையும் திருவள்ளுவர் அழகொழுகக் கூறியுள்ளார். நாட்டிற்கரசன் இன்றியமையாது வேண்டப்படுவான் என்னும் உண்மையை, "ஆங்கமை வெய்தியக் கணணும் பயமின்றே, வேந்தமை வில்லாத நாடு" என்ற குறளில் உணர்த்தியுள்ளார். நாட்டிற்கரசன் இன்றியமையாது வேண்டப்படுபவன் என்றும், அரசன்காவற் சாகாடு கைத்தற்கண் பெரியோரைத் துணைக் கொள்ள வேண்டுமென்றும், நாடு நாடாதற்கு நாடா வளமுடையதாய், தக்காரையும், தாழ்விலாச் செல்வரையும் தன்னகத்தே யுடையதாய், பசியும், பிணியும் சேரப் பெருததாயிருக்க வேண்டுமென்றும் ஆசிரியர்கூறும் உண்மைகள் உன்னற்பாலன. திருக்குறளில் நுவலப்படும் அரசியற் கருத்துக்கள் பல, உலகம் அமைதி பெற்று இன்பநலம் அடைதற்கு ஏற்ற முறைகளாயுள்ளன.

திருக்குறள், அறத்தினை உணர்த்ததலைப் படுவார்க்கு ஒரு போத நூல், அரசியலையறிய விரும்புவோர்க்கு ஓர் அரசியல் நூல், ஞானத்தை விரும்புவார்க்கு ஒரு ஞான நூல், கவிச்சுவை விரும்புவார்க்கு ஒரு காவியம், காமச்சுவை வேண்டுவோருக்கு ஒரு காமநூல், பேரின்ப மடையத் தலைப்படுவோருக்கு ஒரு பேரின்ப நூல், வாழ்க்கைநெறியறிய விழைவோர்க்கொரு வாழ்க்கை வழிகாட்டி நூல. அந்நூலைப் பயில்வார் பெரும்புலமையும் ஒட்பமும் பெறுவர். அதன்நெறியின்கண் வாழ்பவரே வாழுநம் எனும் செருக்குடன வாழ்ந்து, இம்மையில் இன்புற்றுப் பின் வீடு பேறடைவர்.

# மலர்ந்த உள்ளம்.

(புதுக்கோட்டை. எம். அய். நூர்முகம்மது.)

தென்றல் தவழும் மாலையிலே மலர்ந்த மலர்களினின்றும் எழுந்த இயற்கையின் எழில்கலந்த அந்த நறுமண இன்பத் தினைப் பருகியவண்ணம் தன் வளமேறிய உள்ளத்தினை எங்கோ அலையவிட்டு நின்று கொண்டிருந்தான். அந்த இளைஞன். வசந் தத்தின்வரவினை உவகையுடன்எதிர்பார்க்கும் வானம்பாடியைப்போன்று வில்லாளன் யாரு டைய நல்வரவிற்காகவோ அவ்வளவு நேரம் காத்துக்கொண்டிருந்தான். அதற்குள் எவ் வித எண்ணற்கரிய இன்பக்கனவுகளை வனப் புடன் சிருஷ்டித்ததோ அந்த யுவனது மாண் புற்ற இதயம்!

தினமும் அந்தநேரத்தில் 'கொஞ்சும் மழலைச்சொற்கள் பலபேசித் தன்உள்ளத்தை புளகாங்கிதமுறச் செய்யும் அந்த ஜீவனை அன்று மாத்திரம் அவ்வளவு நேரமாகியும் காணாததுகண்டு அவனது மனம் படாதபாடு பட்டது.

வில்லாளனுடைய கால்கள் அவளுடைய வீட்டை நோக்கி நடந்தன. அவனுடைய கண்ணில் பெட்டி சட்டிகளோடு எங்கோ பிரயாணமாகிக்கொண்டிருந்த மலர்விழியின் குடும்பமே தென்பட்டது. காதுகளில் அவர் களுக்குத் தஞ்சாவூருக்கு மாற்றலாகிவிட்டது, என்ற வார்த்தைகள் விழுந்தன.

வில்லாளனைக் கண்டதும் அவள் கண்கள் கலங்கின. பலவித சிந்தனைகளில் உழன்ற அவளது நேத்திரங்களிலிருந்து 'வெள்ளம் முத்துக்களாக உதிர்ந்தன. என்னசொல்வ தெனத் தோன்றவில்லை.

"அத்தான் என்னை மறந்துவிடுவீர்களா?"

" மறந்துவிடுவதா! இன்னுமா நீ சிறு குழந்தை, ஊர்தான் மாறுகிருயே தவிர உள் ளம் மாறவில்லை மலர்விழி!"

"எப்படி அத்தான் மறக்க முடியும்."

"மலர்விழி எனக்கு உங்கள் குடும்பத்தை மறத்தல் என்பது எங்ஙனம் சாத்தியம்!"

அவன் கண்களை மூடித்திறந்தான். மலர் விழியைக்காணவில்லை. அச்சமயம் வண்டியி லேறிய மலர்விழியின் கண்ணினின்றும் சிந்தின நீர்த்திவலைகளின் பிரதிபிம்பமும் வாலிபனது இதயத்திலே நன்கு பதிந்தி ருந்தது. " போய்வரட்டுமா! " என்று விடை பெற்றுச்சென்ற அந்த மானேஜருக்கு என்ன பதில் சொன்னேமென்று கூட நினைவில்லை வில்லாளனுக்கு!

மலர்விழியும் வில்லாளனும் கல்லூரியில் நேசமுடையவர்களாயினர். மலர்விழியின் அழகில் மயங்கினன் கல்லூரி மாணவர் தலைவன் வில்லாளன். இலக்கிய மன்றத்தில் பேசிய வில்லாளனின் பேச்சின் திறனைக் கண்டு அடிமையாகிவிட்டாள் மலர்விழி. இரு வாலிப உள்ளங்களும் ஒன்றுசேர்ந்தன. உள்ளமெனும் வீணையிலே அன்பெனும்தந்தி சுண்டப்பட்டால் காதலெனும் நாதம் எழத் தானே செய்யும்?

வில்லாளன் எழுதும் சிறுதொடர்கதை களையெல்லாம் தன் தந்தைக்கும் படிக்கக் கொடுப்பாள் மலர்விழி. வில்லாளனின் கதை களும், தமிழ்நடையும் அவன் தந்தை சாம்ப சிவத்தைக் கவர்ந்தன. வில்லாளனுக்கு தன் இல்லத்தில் லைசன்ஸ் இல்லாமல் நடமாட விட்டார்.

காலச்சுழலில் பொழுதுவிடிந்து பொழுது போனல் வில்லாளனுக்கு; தான் உண்டு, கல் லூரி உண்டு, மற்ற நேரங்களில் தன் அன் பின் ஜோதி மலர்விழி உண்டு, இவ்விதம் கடந்து சென்றன அவனது நாட்கள்.

காதல் படகில் உலவி ஆனந்தக் களிப்பி லிருந்த நேரத்தில்தான் மலர்விழியின் தந் தையை தஞ்சைக்கு மாற்றியதும் ஏற்பட்ட துக்கத்தால் வில்லாளன் சிந்தித்தவாறு உட் கார்ந்திருந்தபோதுதான் நண்பன் துரை ராஜுவால் சிந்தனையினின்றும் விடுபட்டான்.

"வில்லாளா! எந்த போராட்டத்தைத்துவக்க இத்தனை யோசனை?"

"போராட்டம் தான் துரை! என்மனதிலே பெரும் போராட்டம் தான்! என் உயிர்க்காதலி என்னைவிட்டுப் பிரிந்ததால், என்னுள்ளத்தில் கொந்தளிப்பு—குமுறல்—ஒரே போராட்டம்".

"காதல் சுரத்தால் புலம்புகிருயா? மனதை திடப்படுத்து, காதல் கைகூடும், வா; வெளியே சென்று உலவி வரலாம்"

நண்பர்கள் இருவரும் உலவச் செல் கின்ற நேரத்திலெல்லாம் அங்கு பார்க்கின்ற இயற்கை அழகில் தன் காதலியின் அழகையும் பேசிப்பேசி, கண்டு கண்டு, ஆறுதல் அடை வான்.

சுடர்விட்டு ஒளியுடன் பிரகாசிக்க வேண் டிய ஜோதியை இருள் சூழ்ந்துகொண்டால் அப்புறம் வாழ்விலே ஒளி ஏது? மலர்விழியின் குடும்பத்தைப் பிரிந்து, அன்றெல்லாம் மாதங் கள் வருடங்களாகி உருண்டோடின.

இப்போதும் மலர்விழியின் சிந்தனைதான் வில்லாளனுக்கு. அதுவும் அன்று மலர்விழியி டமிருந்து வந்த "அஞ்சலை"க்கண்டதும் தன் உள்ளமே மலர்விழியெனக் கருதினுன். பல முறை "அஞ்சலை"ப் படித்துப்பார்த்து அதனுல் ஏதோ ஓர் இன்பத்தைப் பருகுவதாக அவன் மனம் அவனைத் தூண்டியதால், நினைக்கும் போதெல்லாம் அஞ்சலைப் பிரித்துப்படித்தான்.

தஞ்சைமாநகர்,

. .. .... .. ...

அன்பரே,

என் உள்ளத்தைக் கொள்ளைகொண்ட காதலரே! தங்களது பார்வையிலிருந்து வில கிய அன்றிலிருந்து, எனக்குத்தங்களதுநினைவு தான். தஞ்சைக்கு வந்தபின் தங்களைக் காண முடியாமல் புழுப்போல்தவிக்கிறேன். சென்னை யிலுள்ள என் தூரபந்து ஒருவருக்கு என்னை மணமுடிக்கத் தந்தை முடிவுசெய்திருந்தார். காதலால் கட்டுண்டு காதலில் வெற்றிகாணுத் தவிக்கும் என் மனநிலையைக் கண்டபின் தாய் தந்தையிடம் பலவிதத்தில் கூறி, விடாது முயன்று வெற்றிபெற்றுவிட்டாள், என்னைத் தங்களுக்கு மணமுடிப்பதென்று. தந்தை இணங்கிவிட்டார் தடையினி ஒன்றுமில்லை. மகிழ்ச்சியானசெய்தி, விரைவிலேசந்திப்போம். வணக்கம். தங்கள் காதலி,

மலர்விழி.

இதை ஒருவாருகப் படித்துமுடிப்பதற்கும், "சார்" என்ற ஒரு குரல் கேட்பதற்கும் கணக் காக இருந்தது.

எப்போதுசார் வந்தீர்கள்? என்ன செய்தி" என்ருன் வில்லாளன் "இப்போதுதான் வந் தேன்" எப்போதும் தங்கள் நினைவுதான் மல விழிக்கு என்றுகேள்விப்பட்டேன். தங்களையே திருமணம் செய்து கொள்வதாக உறுதிபூண்டு விட்டதாகவும் மலர்விழிகூறியதாக என்மனைவி கூறினுள். உங்களுக்கு மலர்விழியை மணம செய்வித்து என் கண்குளிர காணவேண்டும் என்ற எண்ணம் என் உள்ளத்தில் ஊடுரு விற்று, என்று சொல்லிப் பையிலிருந்து லெட் டரை எடுத்து வில்லாளனிடம் " இதோ! உங்கள் பெற்ருேர்களும் சம்மதித்துவிட்டனர்" என்ருர்.

அப்போதுதான் வில்லாளனின் "மலர்ந்த உள்ளத்திலே" அன்பின் தீப ஒளி வீசிற்று. அன்றுதான் அவன் வாழ்க்கையில் ஓர் புது உணர்ச்சி!

"வாழ்விலோர் திருநாள்" என வானத்தில் அறைகூவி எழுந்த இன்னிசையின் நாதஒலி அவர்கள் இருவரின் செவியிலும் பாய்ந்தது.

(முடிவுற்றது)

---

(17-ம் பக்கத் தொடர்ச்சி)

" கடுகைத் துளைத்து ஏழ்கடலைப்புகட்டிக் குறுகத் தறித்த குறள் " இடைக்காடர்

" அணுவைத் துளைத்து ஏழ்கடலைப்புகட்டிக் குறுகத் தறித்த குறள் " ஔவையார்—முதலி யன குறளின் பெருமையை சிறப்பிக்கின்ற சிறப்புப்பாயிரங்களாகும். இதுவரை திருக் குறள் ஆங்கிலம், ஜெர்மன் முதலிய முப்பது மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

ஆகவே, இத்தகைய தனிப்பெரும் சிறப் புக்கள் வாய்ந்த பொய்யிற் புலவரின் மெய் யுரையை வையகமெல்லாம் பரப்பி தமிழர் களின் மேம்பாடடைச் சிறக்கச் செய்ய வேண்டியது ஒவ்வொரு தமிழ்மகனின் தலை யாய கடனுகும். வாழ்க பொய்யில்புலவனின் மெய்யுரை ! வெல்க தமிழ் !

# பந்தும் பாவையும்

—( பறம்பை. மு. ச. இராசன். )—

சுவரைவைத்துத்தான் சித்திரம் எழுத வேண்டும் என்ருர் தந்தை திரு வி. க. இக்கூற்று தனிப்பட்ட ஆணையோ பெண்ணையோ சுட்டுவது அன்று. சுவர் பழுதடைந்து வண்ணக்கோல் திறனுடைத்தாயினும், வண்ணக்கோல் நிலை கெட்டுச் சுவர் நன்னிலையில் உள்ளதாயினும் இவற்ருல் அமைக்கப்படும் சித்திரம் நன்கு அமையா. அமையினும் நீண்டுவாழா. இதுபோல் தான் ஆண் பெண்என்ற இருபாலாரும் வலியுடையராயிருப்பின் இவர் வழித்தோன்றலும் வலியுடனிருப்பர். வருங்காலத் தமிழகமும் பொலிவு பெறும். இக்கருத்து பற்றியே தேசியக் கவிஞரும் "உடலினை உறுதிசெய்" என்ருர்.

பெண்கள் உடலுரம் அடையக் கும்மி, கோலாட்டம் போன்ற ஆடல்களே இக்காலத்துக் கையாண்டு வருகின்றனர். இவ்வாட்டங்களால் இன்னேர் உடலுறுதி அடைவர் என்று எண்ணுர் பெரியோர். வேறு வழி என்னே? என அப்பெரியோரையே வினவின் அன்னர் தம் முன்னேராய பன்னெடுங் காலத்துச் சங்ககாலத்தவரை எண்ணி, அவர் கண்ட வழிகளைக் காட்டுவர். அவ்வண்ணமே கண்டால் பெண்கள் பந்து ஆடினர் என்பதனை அறியலாம்.

வயலைக்கொடி படர்ந்த பெரிய பந்தலின் கீழ் வயதும் அழகும் வாய்க்கப்பெற்ற மங்கைப் பருவத்தாள் ஒருத்தி பந்தொன்று எடுத்து தன் கைகள் சிவக்கச்சிவக்க பந்தடித்துக்கொண்டிருக்கிருள். இந்நேரத்தில் அவளின்தாய் வருகிருள். வந்தவள் இவள் ஆடுவதைக் கண்டு சினந்து "ஏடி! மணப்பருவம் எய்திவிட்டனையே. இன்னும் சிறு பிள்ளையைப்போல் பந்து ஆடுகிருயே. நீ வயது வந்தபெண்தானே? என்றுகூறியதாக.

"பந்தர் வயலைப் பந்தெறிந் தாடி
இளமைத் தன்மையை வளமனைக் கிழத்தி
பிதிர்வை நீரை பெண்நீறு ஆகென
யாந்தன் கழறுங் காலை"—இவ் அக

நானூற்று அடிகளால் அறியலாம். மற்றும்

மூங்கில் போன்ற தோளினையும், மணங்கமழ்கூந்தலினையும், மானேக்கினையும், மயிற் சாயலினையும் உடையாள் தன்னிரு கால் சிலம்புகள் கிலுகிலுக்கும்படி, தன்கையில் பந்தெடுத்துத் தரையில் தட்டியடித்த வண்ணமே வீட்டிலிருந்து ஓடிவந்தாள். இவ்விதம் வந்தவளின் அழகும் ஆடலும் கண்டான் ஒருவன் விழித்த சிலை போல் நின்ருன். நின்று சில பிதற்றினன் என்ற செய்தியை

"வேயெனத் திரண்டதோள் வெறிகமழ்
வணரைம் பால்
மாவென்ற மடநோக்கின் மயிலியல்
தளர்பொல்கி
ஆயசிலம் பரியார்ப்ப .... .... —
.... .... .... நுந்தைதொல் வியனகர்

இளமையான் எறிபந்தோ டிகத்தந்தாய்
கேளினி"—

இவ்வடிகள்கொண்ட கலிப்பா விளக்குகிறது.

சங்ககாலம் விடுத்துப் பிற்காலத்திலும் பெண்கள் பந்தாடினர் என்பதை நான்காவது ஐந்தாவது நூற்றூண்டில் எழுந்த நூல்களைப் பார்த்தால் நன்கு புலப்படும். இக்காலத்து எழுந்த நூலான பெருங்கதையில், உதயணனின்மனைவியரான வாசவதத்தையும் பதுமாபதியும் தத்தம் சேடிமாருடன் ஒருநாள் முழுமதி நிலவு பரந்த முற்றத்துக் கூடி நின்று பந்தாடியதாகக் குறிப்புக் காணப்படுகிறது. பந்தடி காதையில் பந்துக்கள் செய்யப்படும் விதமும் அவற்றை எடுத்து ஆடுமுன் ஆடுபவள் பந்தடித்தலுக்கு உண்டான இலக்கணங்களைச் சொல்லிப்பின் ஆடுவாள் என்ற செய்தியும் காணப்படுகிறது. ஒருத்தி கையில் பல பந்துகள் எடுத்து, ஒன்றன்பின் ஒன்ருக விண்ணகத்தடித்தும், அடித்துக்கொண்டே அவிழ்ந்த துகிலை உடுத்துக் கொண்டும், குழன்ற கூந்தலைப் பின்னியும், பண்ணுெடு பாக்களைப் பாடிக்கொண்டும் ஆடுவாள் என்ற பகுதி மிக அழகாகப் பாடப்பட்டுள்ளது.

பதினைந்தாம் நூற்றூண்டுப் பெண்ணுெருத்தி ஐந்து பந்துவைத்து ஆடிக்கொண்டு ஆகாயக்கங்கையுடை செஞ்சடையானைக் காணவந்தாள் என்று திரிகூடராசப்பக் கவிராயர் கற்பனையாகப்பாடியுள்ளார். இதனைக் கீழ்க்காணும் பாவால் தெளியலாம்.

"வருசங்க வீதி தன்னில் வசந்தபூங்
கோதை காலில்



# எழுத்தாளர்களுக்கு!

**தமிழ் மொழிக்கும், நாட்டுக்கும், மக்களுக்கும், பிற்பட்ட வகுப்பினர்க்கும் பயன்படுமாறு நல்ல கதை, கட்டுரை, கவிதைகள் வரவேற்கப்படுகின்றன.**

**ஒரே பக்கத்தில் எழுதி அனுப்புக.**

**திரும்பப்பெற விரும்புவோர் தபால் தலை அனுப்பவேண்டும்.**

இருபந்து குதிகொண்டாட இருபந்து
முலைகொண்டாட
ஒருபந்து கைகொண்டாட ஒருசெப்பி
லைந்து பந்துந்
தெரிகொண்டு வித்தை யாடும் சித்தரை
எதிர்கொண்டாளே"

கி. பி. 1500வரை இருந்த பழக்கம் ஏனே இக்காலத்து ஒழிந்ததோ தெரியவில்லை. நம்நாட்டில் இக்காலத்தில ஆண்களே இவ்வாட்டங்களை கைக்கொண்டு வருகின்றனர்.

தமிழகத்தில் ஆண்கள் ஆடும் ஆட்டமாகச் சிலம்பம், சடுகுடு, மற்போர் போன்றவை திகழ்ந்து வந்தன. இவை இக்காலத்துக் கிராமங்களில் மட்டுமே விரும்பி வளர்க்கப் படுகின்றன. விரைவில் இவை அழியும் என்பதும்திண்ணம். உடலுரம்தரும்ஆடல்களைவிட்டுப் பாவையரின் பந்தாடுவிளையாட்டை மேற்கொண்டனர். என்னே ஆண்களின் திறன்! பெண்களோ பந்தடித்தல், பரதநாட்டியம் போன்றன விடுத்து உடல் நோகா கும்மி, கோலாட்டம் முதலானவற்றை மேற்கொண்டனர். இவையும் காலச்சுழற்சியினுல் காற்று மட்டும் பெற்று இன்புறும் "இன்ப இடம்" [BEACH] செல்லும் நிலைக்கு மாறிவிட்டது.

எனவே பெண்கள் தம் உடலை உறுதி செய்யப் பந்தாடுதல் போன்ற ஆடல்களை மேற்கொள்ளல் வேண்டும். அப்பொழுது தான் உடலுறுதியும் அறிவுத் தெளிவும் பெறமுடியும். தாய் போலவே பிள்ளையும் ஆவர். இவர் வளறும் நாடும் வளம் பெறும்.

—○—

அளவுக்கு வந்துட்டே அப்படித்தானே!"

"இல்லேப்பா—என்மனசிலே இருந்ததைச் சொன்னேன்."

"வேறு என்னதான், நீ நெனச்சுகிட்டு இருக்கே"

"வந்து........வந்து என்னுடைய கிளாஸ் மேட் சேகர்னு பேரு—நம்ம ஜாதிதான்—ஆனு பணமில்லாதவரு-ஸ்காலர் ஷிப் மூலம் படிச்சிகிட்டு இருக்கிருரு....... ...."

"போதும்...நாளேயிலே இருந்து நீ காலேஜிக்குப் போகவேண்டாம். நான் சொல்ற மாப்பிள்ளேயைத்தான் கட்டிக்கணும்"

"அப்பா—அப்பா—நான் சொல்றதை...."

"கேட்க தயாரா யில்லே"

"அப்பா.... ...........அப்பா"

மங்களத்தின் கூக்குரலேக் காதிலேயே போட்டுக்கொள்ளாமல் வெளியே சென்று விட்டார் தர்மலிங்கம்.

மறுநாள் காலே காலேஜிக்கு போகக் கிளம்பிக் கொண்டிருந்தான் சேகர். "சார்! அம்மா இதைக்கொடுத்துவிட்டு வரச்சொன்ஞங்க" என்று கூறி கடிதமொன்றை கொடுத்துவிட்டுச்சென்ருள் மங்களத்தின் வேலேக் காரி. அவசர அவசரமாகக் கடிதத்தைப் பிரித்துப்படிக்க ஆரம்பித்தான் சேகர்.

"அன்புள்ள சேகர்

இன்று மாலே எங்கள் வீட்டின் பின்புறத்தில் என்னேச் சந்திக்கவும்—மற்றவை நேரில்—மறக்கவேண்டாம்

இப்படிக்கு,
மங்களம்.

கடிதத்தைப் படித்த சேகருக்கு ஒன்றுமே புரியவில்லே. அன்று முழுதும் பாடத்தில் கவனமேயில்லாமல் இருந்தான் சேகர். காலேஜ் விட்டதும் நேராக மங்களத்தின் வீட்டிற்குச் சென்று அவளேச் சந்தித்தான்.

"என்னே வரச்சொல்லி எழுதியிருந்தாயே!— என்ன விஷயம்?"

"சேகர்-வீண்பெருமை, அந்தஸ்து இவற்றையெல்லாம் நான் சிறுவயதிலிருந்தே வெறுத்துவருகிறேன். என் தந்தை என்னே பணத்திற்காக பலியிடுகிருர். ஆனல் என் உள்ளம் உங்கள் கொள்கைக்குத் தலே சாய்த்து நிற்கிறது. அதனுல் தான் என் வாழ்வு வளமபெற வழியமைத்துத்தர, உங்களே இங்கு வரச்சொன்னேன்"

"மங்களம்—உண்மையில் நான் அதிர்ஷ்ட சாலி தான். ஆனுல் உன் தந்தை மறுத்து விடுவாரோ"

"அதுதான் எனக்கும் தெரியுமே வேறு ...........ஏதாவது"

"ம்.......... சேகர் சிந்தனேயிலாழ்ந்தான் சில நிமிடங்கள் சென்று மறைந்தன" குட்—ஐடியா—மங்களம் இங்கு வாயேன்" என்று கூறி அவள் காதில் ஏதோ கூறினன். அதைக்கேட்ட மங்களத்தின் முகம் பூர்ண சந்திரன் போல் பிரகாசித்தது.

ஒருநாள் பிள்ளேயவர்கள் வராந்தாவில் உட்கார்ந்து படித்துக்கொண்டிருந்தார்.

"அப்பா—நான் என் சிநேகிதியின் வீட்டுவரைக்கும் போய்விட்டு.......................

'தடால்!"

கீழே விழுந்த மங்களத்தை ஓடிச் சென்று தூக்கினர் பிள்ளே. டாக்டருக்கு ஆள் பறந்தது. டாக்டரம்மாளும் வந்தார்கள்—பரிசோதித்த பின் பிள்ளேயின் காதில் ஏதோ கூறிவிட்டுச்சென்ருர் அவ்வளவுதான் பிள்ளேக்கு உலகமே சுற்றுவது போல் இருந்தது. கீழே விழாதிருக்க தூணேக்கெட்டியாக பிடித்துக்கொண்டார்.

பலநாட்களுக்குப் பிறகு ஒருநாள் பிள்ளேயவர்கள் "மங்களம்' என்று உற்சாகத்துடன் கூவிக்கொண்டே உள்ளே நுழைந்தார்.

"என்னப்பா—என்ருள் மங்களம்"

"சேகருக்கும் உனக்கும் கல்யாணம் ஏற்பாடாகி இருக்குதம்மா"

"சேகருக்கும் எனக்குமா? வேண்டாமப்பா—கறைபட்டவுடலே".... .. .... ...

"அடிப்பாவி— குலப்பெருமையையே கெடுத்துவிட்டாயே—உனது இந்த நிலேக்கு சேகர்தான் காரணம் என்று எண்ணி அவர்களதுதாழ்மையையும்எண்ணுதுமானம்போய் விடுமோ என்றஞ்சி கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்தேனே கெடுத்துவிட்டாயே—இது அவர்களுக்கு தெரிந்தால்............

# கௌரவம்

ரோஜா

அன்புள்ள நேயர்களே!

இது என்னுடைய சொந்த விஷயமானாலும் உங்களிடம் மட்டும் கூறுகிறேன். தயவு செய்து என்னுடைய மாமனாரிடம் மட்டும் கூறிவிடாதீர்கள். இனி நீங்கள் மேலே படிக்கலாம்.

" அப்பா!: நானும் அவரும் வெளியே போய்விட்டு வர்ரோம், வர சற்று நேரமானாலும் ஆகும், அதனாலே எங்களுக்காகக் காத்திருக்காமே சமையற்காரனைச் சாப்பாடு போடச்சொல்லி சாப்பிட்டுவிடுங்க"

" சரிம்மா! நீ ஜாக்கிரதையாகப் போய் விட்டுவா "

அடுத்து சில நிமிடங்களில் கார் புறப்படும் ஓசை கேட்டது. பிறகு வர வர அதன் சப்தம் குறையத் தொடங்கியது. கார் சென்ற திசையையே பார்த்துக்கொண்டிருந்த கிழவரின் சிந்தனைக் குதிரை பின்னோக்கி ஓடியது.

கீரனூர் தர்மலிங்கம்பிள்ளை யென்றாலே அந்த வட்டாரத்தில் தெரியாதவர்கள் இருக்க முடியாது. அந்த வட்டாரத்துப் பெரிய புள்ளிகளில் ஒருவர். கௌரவம், அந்தஸ்து, எள்ளளவும் குறையக்கூடாது என்ற மனப்பான்மையுடைவர். அவர் குடும்பம் விளங்க பிறந்தவள் தான் மங்களம். அவள் பிறந்து சில ஆண்டுகள் முடிவதற்குள்ளே மலேரியா அவள் தாயைப் பலிகொண்டது. உலகமறியாத பச்சிளங் குழந்தையை வைத்துக் கொண்டு வகை தெரியாது தடுமாறினார் பிள்ளை. பெண் கொடுக்க வந்தவர்களையெல்லாம் ஒதுக்கிவிட்டார் (அந்த மட்டில் நான் அதிர்ஷ்டசாலி)

ஆண்டுகள் பதினெட்டு ஓடிமறைந்தன. மங்களமும் வளர்ந்து யௌவன பருவத்தை யெட்டிப் பிடித்தாள். தாயைப்போல் மகள் என்ற வகையில் தாயைப்போலவே சிவப்பாக இருந்தாள். மருண்ட விழிகள்—கொவ்வைச் செவ்வாய்—பாம்புபோன்று நீண்டு வளர்ந்த சடை—வாளிப்பானவுடல் (கதையில் மட்டுமல்ல நேரிலும் இப்படித்தான் இருப்பாள் மங்களம்) ஸ்கூல்பைனல் முடித்தவுடன் அவளைக் காலேஜில் சேர்த்தார் பிள்ளை. மங்களத்திடம் அவர் கண்ட குறை அவள் தன்னைவிடத் தாழ்ந்தவர்களிடத்தும் ஒட்டிப் பழகுதல் தான். பலமுறை திருத்தியும் பயனில்லை.

அன்று அவளுடையகாலேஜில் பேச்சுப் போட்டி நடந்தது. உயர்ந்தவர்—தாழ்ந்தவர் என்ற தலைப்பின் கீழ் மாணவ மாணவியர் பலர் பேசினார்கள். கடைசியில் கற்றவர் உயர்ந்தோரென்றும், கல்லாதவர் தாழ்ந்தவரென்றும்—மக்களது உயர்வு தாழ்வு மனப்பான்மை கூடாது என்றும் பேசிய சேகருக்கு பரிசு கிடைத்தது. சுருள் சுருளான கேசம், எளியவுடை, இனிமையான பேச்சு—அன்புப் பார்வை இவையே சேகரின் உருவம் (ஹி—ஹி என்னைப்பற்றி நானே வர்ணித்தால் நல்லாயிருக்காதல்லவா?—அதனால் இதுவே போதும் எனக்கு) நண்பர்கள் என்ற முறையில் மங்களம்—சேகர் நட்பு வளர்ந்தது.

ஒருநாள் மங்களம் தன் வீட்டு ஹாலில் உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்தாள். அப்பொழுதுதான் உள்ளே வந்த பிள்ளையவர்கள் "மங்களம் ஒரு விஷயம்" என்றார்.

" என்னப்பா அவ்வளவு முக்கியமான விஷயம்"

"நாளைக்கு மேலப்பாளையத்திலே இருந்து பெண் பார்க்க வர்ராங்க அதனாலே காலேஜுக்கு லீவு போட்டிடு—என்ன?"

"கல்யாணத்திற்கு இப்ப என்ன அவசரம்"

" என்னம்மா—குழந்தை மாதிரி பேசிகிட்டு. நல்ல சம்பந்தம். மாப்பிள்ளை பெரிய பணக்காரன்—சொல்லவாவேணும்"

..............."என்னம்மா பதிலே காணும்"

"அப்பா—வாழ்க்கைக்கு முக்கியம் பண்மல்ல—பண்புதான். ஏழையானாலும் அன்பும் அறிவும் இருந்தா போதும்"

"ஊஹூம்—எனக்கே புத்தி சொல்லித்தர

# ★ கனவுலகில் ★

அன்றுமாலை மனநிலை சரியில்லாததால் நான் நடந்து கொண்டிருந்தேன். அத் திருப்பத்தில் "நாராயண பவன்" சிற்றுண்டி சாலை இருந்தது. விடுதியினுள் சென்று காபி ஒன்று அருந்திவிட்டு, திரைப்படம் பார்க்கலாம் என்று கொட்டகையினுள் சென்றமர்ந்தேன். தமிழ் நாட்டின் பிரபல கதாசிரியர் ஒருவரின் கதையை, சிறந்த வசன கர்த்தா ஒருவர் வசனம் எழுதிய படம் என்றும், அப்படத்தில் நடிப்பு உச்சக் கட்டத்தில் இருக்கின்றது என்றும், என் நண்பர்கள் சொல்லக்கேட்டிருக்கிறேன். நடிப்புக்கலை என்றால் எனக்கு உயிர். எனவே அப்படத்தை ஒரு முறை காணச் சென்றேன். படம் இரண்டாவது வாரம் ஓடிக்கொண்டிருந்தது கூட்டம் குறையவில்லை என்றாலும் என் மனத்தில் குறை இருந்தது அதை மறைக்க படம் பார்க்கவந்தால், அமைதி அடையவில்லை என் மனம். மெள்ள என் மனத்தை படத்தில் திருப்பினேன். பிறகு என் மனம் படத்தில் ஒன்றிவிட்டது. படம் முடிந்து வெளியில் வந்தேன். என் எண்ணம் எல்லாம், எதிர் காலத் தமிழகத்தைப் பற்றித்தான் கோட்டை கட்டிய வண்ணம் இருந்தது. எண்ண அலைகள் என் நடையை சற்று வேகமாக்கியது. இரவு உணவு வேண்டாம் என்று என் அன்னையிடம் சொல்லிவிட்டு கயிற்றுக்கட்டிலை மொட்டை மாடி வராந்தாவில் இழுத்துப்போட்டு படுத்தேன்.

வேங்கை மார்பன்
இடைப்பாளையம்.

அமர உலகில்,
( வ. உ. சி. அவர்களின் இல்லம்.)
தோன்றுவோர்:- வ. உ. சி, பாரதியார் சங்கரலிங்கநாடார்.

( வ. உ. சி, உடை யணிந்துகொண்டு வெளியே கிளம்புகின்றார். அமரகவி பாரதியார் அங்கு வருகின்றார். அவரை வ. உ. சி. அவர்கள் வரவேற்கின்றார். )

வ. உ. சி:— வணக்கம். வாருங்கள் பாரதியாரே! உட்காருங்கள்.

பாரதி— (உட்காருதல்) வணக்கம். எங்கே கிளம்பிவிட்டீர்கள்?

---

முன்பக்கத்தொடர்ச்சி.

" அப்பா—என்னை மன்னித்துவிடுங்கள்—நான் வாழ விரும்பவில்லை."

" மங்களம்—இருக்கிற வேதனை போதாதென்று இதுவேறு புதுசா கிளப்புறியா—வேண்டுமானால் நீஇதுபற்றி சேகரிடம் ஒன்றும் கூறாதிருந்தால்............

" அப்பா................"

" வேறு வழியில்லையே மங்களம் என்ன செய்வது"

" சேகர்—மங்களம் திருமணம் வெகு விமரிசையாக நடந்தது. பிள்ளையின் மனமாற்றத்தையும் பெருந் தன்மையையும் கண்டு உலகமே அதிசயித்தது. ஆனால் பிள்ளைக்கோ இந்தக்கல்யாணத்தில் விருப்பமில்லை.

ஐயா சாப்பிடவரீங்களா. பிள்ளையவர்களின் சிந்தனைக் குதிரை திடீரென்று வீழ்ந்தது.

" ம்—சாப்பாடா—வர்ரேன் போ என்று கூறிக்கொண்டே உள்ளே சென்றார்.

( பி. கு. ) அவருக்குத் தெரியாத ஒரு ரகசியத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன் அவரிடம்மட்டும் கூறிவிடாதீர்கள். உண்மையில் மங்களம் தவறிவிட்டவள் அல்ல—என்னுடைய யோசனை தான் அது. டாக்டர் யார் தெரியுமா எங்களுடைய கிளாஸ்மேட். கடிதம் நீண்டுவிட்டது மன்னித்துவிடுங்கள் வணக்கம்.

இப்படிக்கு
உங்கள் அன்புள்ள,
சேகர்.

★

வ. உ.சி:- உங்களைக் காணத்தான் புறப்பட்டேன். நீங்களே............

பாரதி:- அப்படி என்ன இன்றியமையாத செய்தி?

வ. உ. சி:- சிறிது நாட்களாகத் தங்களைக் காணவில்லை யல்லவா? செய்திகள் ஒன்றும் தெரியவில்லை.

பாரதி:- எதைப்பற்றி சொல்ல, நமது தமிழ்நாட்டை எண்ணும்பொழுது வேதனையாகவுள்ளது. கண்ணீர்விட்டுக் கதறவேண்டும்போல் தோன்றுகின்றது.

வ. உ. சி.- அப்படி என்ன நடந்துவிட்டது?

பாரதி:- இன்னும் என்ன நடைபெறவேண்டும்? தமிழ்நாட்டில், ஏமாற்றி வாழ்கின்ற எத்தர்களும், ஏமாறுகின்ற இளிச்சவாயர்களும், ஆண்டிகளின் கூட்டம் முதல் கோலோச்சும் குணாளர்வரை மலிந்துவிட்டனர். தமிழ்நாடு என்று சொல்வதற்கே வெட்கமாக இருக்கின்றது.

வ. உ. சி - அப்படியா? ..........

பாரதி:- ஆமாம். தமிழ்நாடு என்று சொல்வதற்கே வெட்கப்பட வேண்டிய நிலையில் தமிழ் மக்கள் உள்ளனர்.

வ. உ. சி- என்ன பாரதியாரே, இப்படிச் சொல்கின்றீர்கள்? தமிழ்நாடு தனி மாநிலமாக அமைந்துவிட்டது என்று அண்மையில் தானே தெரிந்தது.

பாரதி:- தனி மாநிலமாகத்தான் அமைந்துள்ளது. ஆனால்,.....நம்முடைய பெயரைச் சொல்லி, மக்களை எல்லாம் ஏமாற்றுகின்றார்கள் "வ. உ. சி. யின் வழி வந்தவர்கள்" "பாரதியின் பரம்பரை நாங்கள்" என்றெல்லாம் மக்களிடம் எடுத்துக்கூறி அவர்களை மயக்கி, வரும் பொதுத்தேர்தலில் வெற்றிபெற ஆட்சியாளர் ஆவன செய்கின்றார்கள்.

வ. உ. சி:- ஆட்சியாளரா இவ்வாறு இழி நிலையில் செல்லுகின்றனர்! என்னால் நம்பவும் முடியவில்லையே? இப்பொழுது நமது நாட்டில் தமிழரின் ஆட்சியல்லவா நடைபெறுகின்றது. அது தமிழருக்கெல்லாம் நல்ல உதவிகளைச் செய்து வருவதாக வேறு செய்திகள் கிடைத்ததே! அவை எல்லாம்....

பாரதி:- பொய்...........! பொய்.... .. !! ஆட்சி என்னமோ பச்சைத்தமிழர் ஆட்சிதான். ஆனால்........நடைபெறுவதெல்லாம் காய்ந்துபோன தமிழர் ஆட்சிதான்!

வ. உ. சி:- அப்படியென்றால்.....இவர்கள்.....

பாரதி:- ஆள்வதற்குத் தகுதியே இல்லாதவர்கள். இவர்களுக்குள் சண்டை சச்சரவுகள். "பதவியிலிருந்தால் துதி பாடுவது, பதவியிலில்லாவிட்டால் தூற்றுவது" என்ற கொள்கையைக்கடைப்பிடிக்கின்றனர். வெளிப்படையாகவே அமைச்சர்கள் தங்களைத் தாங்களே தாக்கிக்கொள்கிறார்கள்............

வ. உ சி:- அப்படிப்பட்டவர்கள் யார்?........ ஓகோ........அவர்களா! இருக்கட்டும். தமிழ் நாட்டிற்கு பலம் வாய்ந்த ஒரு எதிர்க்கட்சி அமைந்தால்தான் நாடு இனிமேலாவது முன்னேறும். என்ன செய்வது? சுயநலத்திற்காக இப்பொழுது எல்லோரும் பதவிகளில் ஒட்டிக்கொண்டுவிட்டார்கள் நமது நாட்டின் எல்லைகளெல்லாம் பறிபோன வேளையிலும் ஆனந்த பைரவி இராகம் பாடிய அமைச்சர்களாயிற்றே. பதவியிலிருந்து விலகினால்....பறிபோன எல்லைகள் கிடைக்குமா? என்று கேட்டு, எதிர்க் கட்சியினரை நையாண்டி செய்தவர்களாயிற்றே இவர்கள்! நினைத்தால் நெஞ்சம் பற்றி எரிகின்றது. நாம் வாழ்ந்த நிலை என்ன? நாம் இருந்த நிலை என்ன?

(இச்சமயம் கதவு தட்டும் ஒலி கேட்கவே, கதவைத திறக்கின்றார் பாரதி. வெளியே மெலிந்த உருவுடன், எலும்புக் கூடுதான் மனிதனின் உருவம் என்பதைக் காட்டியவாறு ஒரு முதுபெருங்கிழவர் உள்ளே வருகினறார்.)

நாடார்:- ஐயன்மீர் வணக்கம்! இது தானே வ. உ. சிதம்பரனாரின் விடுதி?

பாரதி:- வணக்கம். ஆமாம், இது தான் அவரின் விடுதி. இவர்தான் வ. உ சி

வ. உ. சி:- வணக்கமய்யா! தாங்கள் யார்? தங்கள் பெயர் என்னவோ?

நாடார்:- என் பெயர் சங்கரலிங்கம். நான் நம் தமிழ்நாட்டைச் சார்ந்தவன்.

(தமிழ்நாடுஎன்றவுடன், வ. உ.சி. நாடாரைக் கட்டிப்பிடித்துக் கொண்டு ஆனந்தக்கண்ணீர் விடுகின்றார். நாடாரின் கை களைபபிடிதது பாரதியார் தன்னுடைய கண்களிலே ஒத்திக் கொள்கிறார்.)

பாரதி.- நீங்கள் எப்பொழுது வந்தீர்கள்? ஏன் வந்துவிட்டீர்கள்?

நாடார்:- நானா வந்துவிட்டேன்? என்னைப் போவென்று சொல்லி துரத்திவிட்டார்கள்.

பாரதி<br>வ. உ. சி. } என்ன! போகச்சொல்லிவிட்டார்களா? நடந்தது என்ன?

(நாடார் தேம்புகின்றார் இதைக்கண்ட இருவரும் துணுக்குற்று அவரைத் தேற்றுகின்றனர்)

வ. உ. சி:- ஐயா! ஏன் அழுகின்றீர்கள்! எல்லாம் சற்று விளக்கமாகச் சொல்லுங்கள். நீங்கள் எப்படி இங்கு வந்தீர்கள்?...............

நாடார்:- ஐயன்மீர்! நமதுநாடு மிகவும் பிற்போக்கான நிலையில் போய்க்கொண்டிருக்கின்றது. நாட்டை ஆளுவதற்குத் தகுதியானவர் யாருமில்லை. உத்தமர் காந்தியார் கனவகண்ட சுதந்திர நாடாக இப்பொழுது இல்லை. ஆட்சிபீடத்தில் அமர்ந்துள்ள அனைவரும் ஆங்கிலேயர்களைவிட அழுக்காறு கொண்ட கொள்ளைக்காரர்களாகக்கோலோச்சுகின்றனர். நமது தமிழ்நாட்டின் மானமெல்லாம் பறிபோகின்றது.

பாரதி:- இவ்வளவு மோசமாகவா நாடு கெட்டுவிட்டது? தமிழ்நாட்டில் தானே சிறந்த தலைவர்களெல்லாம் இருக்கின்றார்கள்............?

நாடார்:- அப்படியிருந்தும் நாட்டில் கொள்ளை மலிந்துவிட்டது. இப்பொழுது நமது இந்திய நாட்டில் மொழிவழி மாநிலங்கள் பிரிந்துவிட்டன. அந்தந்த மாநிலங்களில் அவர்களின் தாய்நாட்டின் பெயரையே வைத்துள்ளனர். ஆனால் நமது நாட்டிலோ தன்மானத்தை இழந்து "தமிழ்நாடு" என்று பெயரிடாமல் "சென்னை மாநிலம்" என்று பெயர் தந்துள்ளனர்.... .......மதியூக மந்திரிகள் (என்று விம்முகின்றார்)

வ உ. சி:- பொறுமையுடன் சொல்லுங்கள் நாடாரே!

நாடார்:- தமிழ்நாடு என்று பெயர் வைக்க மறுத்துவிட்ட இவர்கள்தான் பச்சைத்தமிழர்களாம். தமிழ்நாடு என்று பெயர் வைத்தால் மேலைநாட்டிற்குத் தெரியாதாம். தமிழிலக்கியங்களிலே எப்பொழுதும் "தமிழ்நாடு" என்று பெயர் இருந்ததில்லையே என்று கிண்டலும், கேலியும் செய்கின்றனர். தமிழ்நாட்டின் தென்பகுதியிலே உள்ள தேவிகுளம், பீர்மேடு தாலுக்காக்கள் மலையாள மாநிலத்துடன் இணைந்தபோது. தமிழ்நாட்டில் சர்வகட்சி தலைவர்கள் ஒன்று சேர்ந்து கண்டனம் தெரிவித்தார்கள். அப்பொழுதும் "குளமாவது மேடாவது" என்றெல்லாம் வசைபாடினர். இதை எல்லாம் எதிர்த்து "தமிழ்நாடு" என்று நமது தாயகத்திற்குப் பெயரிடும்வரை உண்ணாவிரதம் இருக்கப் போவதாக எடுத்துக்கூறிய பின் உண்ணாவிரதம் இருந்து வந்தேன். நாட்கள் நகர்ந்தன. ஐம்பது, அறுபது, எழுபது ஆயிற்று. அந்த நிலையில்கூட அகம்பாவம்கொண்ட குணத்தினர் என்னை அவமதித்தும், தூற்றியும் துதிபாடினர். என் நிலை அவர்தம் கண்களில் விழவில்லை. கொடுங்கோலோச்சும் இக் குணாளர்களின் குடியாட்சியில் மக்கள் மதிப்பைப் பெற்ற இருபெரும் அரசியல் தலைவர்கள் என்னைப்பார்க்க வந்தனர். ஆவலுடன் வந்த அவ்விரு தலைவர்களிடமும் நான் மனம் விட்டுப்பேசினேன். என் கோரிக்கையை நிறைவேற்றும்படி கேட்டுக்கொண்டேன். தமிழ்நாட்டின் எதிர்காலத்தை அவ்விரு அறிஞர் பெருமக்களிடத்திலும் ஒப்படைத்தேன். என்னைவிட்டுப் பிரிந்தனர். எழுபது நாட்கள் முடிந்தன. அன்றே எனக்கொன்றும் தெரியாது. என் உணர்விழந்தேன், உற்ற நண்பர்களைப் பிரிந்தேன், என்தாய்த் தமிழ்நாட்டைப் பிரிந்தேன். விருதுநகரிலிருந்துநான் மதுரை மருந்துவமனைக்குக் கள்ளத்தனமாகக் கடத்திவரப்பட்டேன். மதுரைமாநகரில்அனாதையைப்போல்இறந்தேன். அனாதைப்பிணமாகவே நினைத்து என்னைப்புதைத்துவிட்டார்கள். காந்தியின் அஸ்தியை வைத்து மண்டபம் எழுப்பிய இடத்தின் அருகில் என்னைப்புதைக்கச் சொல்லியிருந்தேன்.

எங்கோ புதைத்துவிட்டார்கள் ஐயா...........
புதைத்துவிட்டார்கள்.. .........

(நாடார் அழுகின்ருர். வ. உ. சியும் பாரதியும் உடன் சேர்ந்து யாரை யார் தேற்றுவது எனறு அறியாமல் தேம்புகின்றனர்.)

வ. உ. சி:- ஐயா! உமது மறைவிற்குப் பிற காவது "தமிழ்நாடு" என்று பெயர் வைத்தி ருப்பார்கள் இல்லையா?

நாடார்:- வைக்கமாட்டார்கள் ஐயா? அந்தக் கொடியவர்கள். சொன்னுலும் புரியாது, சுயமாகவும் தெரியாது அந்த மந்த புத்தி படைத்த மந்திரி மகான்களுக்கு. அமைச்சர்கள் அவனியை ஆளாமல் ஆடல்வல்லிகளின் ஆடல்பாடல்களிலே ஈடுபட்டுவிட்டனர். சிற்றிடையாள்களின் சரச சல்லாபங்களிலே சிந்தையைச் செலுத்திவிட்டனர் அந்தச் சிறுமதியாளர்கள். எங்கும் எதற்கும் எப்பொழுதும் ஆடம்பரச்செலவுகள் அதிகமாகிவிட்டன. மக்களை மாக்களாக மதிக்கின்றனர் மதியற்ற மாநில மந்திரிகள். நீங்கள் செக்கிழுத்துக்காப்பாற்றிய இந்நாடு சிறுமதியாளரின் பிடியிலே சிக்கிவிட்டது. பாரதியார் பாடலைப்பாடி மக்களை ஏமாற்றுகின்றனர். தமிழ்நாடு என்று வைக்கக்கூடாது என்று சட்டசபையிலே காங்கிரஸ்கட்சி தீர்மானம் வேறு கொண்டுவந்து நிறைவேற்றுகின்றனர். உண்மைக்கு உயர்வு இல்லை. எங்கும் சூது....... ... .

வ. உ. சி- போதும்! நிறுத்துங்கள். தமிழகத்திலா இத்தகைய கீழ்த்தரச் செயல்கள்... ]

திடுக்கிட்டேன்! அப்பொழுதுதான் தெரிந்தது எல்லாம் கனவு என்று. என் உடல் சிலிர்த்தது. இந்த மூவரின் எண்ணங்கள், அஃதாவது நான் "கனவுலகில்" கண்ட காட்சி நனவாகுமென்று சிந்தித்தேன். பொழுது புலரும் நேரம் என்பதற்கிணங்க எங்கோ ஒருசேவலின் 'கொக்கொரொக்கோ' என்ற குரல் கேட்டது. விடியற்காலைக் கண்ட கனவு நனவாகுமென்று சொல்லுவார்கள். அதன் முடிவு எனக்குத் தெரியாது. ஆனல் நான்மட்டும் ஒரு உறுதி செய்து கொண்டேன். வரும் பொதுத்தேர்தலிலே,

# நியாயந்தானே?

மலரன்பன்.

மின்னென இடையைக் காட்டி
முத்தென வெண்பல் காட்டி
தண்ணெனக் குளிர்ச்சி வீசும்
தாமரைக் கண்ணைக் காட்டி
பண்ணென இசையைக் கூட்டும்
பவளமாய் திறந்து காட்டி
விண்ணென என்னுள் ளத்தை
விதிர்ப்பதும் நியாயம் தானே?

அணிவளைக் கைய சைத்து
"அருகில்வா" வென்று சொல்லி
கனிஎனும் கன்னம் காட்டிக்
கடித்திட ஆசை மூட்டி
மணியணி மார்பில் பூண்டு
மயக்குறு விழியால் பேசி
அணியிழை அன்பே! என்னை
அலைப்பதும் நியாயந் தானே?

"இடையிடை யொடியு" மென்று
இணைநகில் சொல்ல, "என்னை
அடையடை" என்று நான்தான்
அணைத்திட அருகும் போழ்து
தடைதடை ஒன்று காட்டி
தகுந்தநல் ஆட்டம் ஆடி
" இடையிடை வருவேன்" என்று
இழுப்பதும் நியாயம் தானே?

---

"தமிழ்நாடு" என்று பெயர்வைப்பதாக, உறுதி கூறி எழுதிக்கொடுத்தாலொழிய என்னுடைய "வாக்குரிமை" யாருக்கும கொடுப்பதில்லை என்றுதமிழன்னைமீது ஆணையிட்டுவிட்டேன் வளர்க தமிழகம்! வாழ்க தமிழ்!!

★

# மதிப்புரை

மதிப்புரைக்கு இரண்டு பிரதிகள் அனுப்பவேண்டும்.

★

## திரு—தமிழரியக்கம்.
## திரு—தமிழகத்தில் மா. பொ. சி.

ஆசிரியர்: பி. எஸ். மணி.

கிடைக்குமிடம்:- மணி பதிப்பகம், ராமவர்மபுரம், நாகர்கோயில், கன்னியாகுமரி மாவட்டம்.

விலை 0—14—0, 0—10—0.

இன்றைக்கு தமிழ்மொழி பேசப்படுகின்ற சென்னைமாநிலத்துடன் சென்ற வருடம் நவம்பர் முதல் புதிதாக திருவிதாங்கூரிலிருந்து ஒருமாவட்டம் அதாவது கன்னியாகுமரி மாவட்டம் சேர்த்திருக்கிறதல்லவா? அம்மாவட்டத்தின் மக்களின் மாபெரும் போராட்டத்தை நடத்திய வீரதளபதிகளில் ஆசிரியரும் ஒருவர். திரு—தமிழர்களின் வீரஞ்செறிந்த போராட்டங்களையும், அவர்களின் இயக்கத்திற்குதமிழரசுக்கழகத் தலைவர் மா. பொ. சி. அவர்களின் சீரிய தொண்டையும் இப்புத்தகங்களில் சித்தரிக்கிருர் ஆசிரியர். நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும் மிகுந்த நல்லோர் ஒவ்வொருவரிடமும் இருக்கவேண்டிய புத்தகங்களே!

∴ ∴ ∴ ∴

## சிலப்பதிகார விருந்து.

ஆசிரியர். நா. சஞ்சீவி. எம். ஏ.

விலை 2—8—0.

வெளியிட்டோர்:- சாமி நிலையம், வரகனேரி, : திருச்சி.

பேராசிரியர் இளங்கோவடிகள் ஆக்கி வைத்த சிலப்பதிகார உணவைநாட்டுப்பற்று என்ற இலையில் ஆசிரியர் சஞ்சீவி அவர்கள் தமிழ் மக்களுக்கு விருந்து அளிக்கிருர். ஆங்கிலக்கவிகளுடன் ஒப்பிட்டு ஆசிரியர் சிலப்பதிகாரத்தை தான் இன்புறுவதல்லாமல் தமிழ் மக்களையும் இன்புற வேண்டுகிருர். சாமி நிலையத்தாரின் முதல்வெளியீடு சிறந்த முறையில் அமைந்திருக்கிறது. எல்லோரும் படிக்க வேண்டிய கருவூலம்.

∴ ∴ ∴ ∴

## வணிக முரசு.

ஆசிரியர்:- வெ. சிவஞானம்

நிர்வாகி:- ப. திருநாவுக்கரசு

ஆண்டு சநதா ரூ. 3-0-0.

அலுவலகம்:135,பவழக்காரத்தெரு, சென்னை.

தமிழகத்தை வணிகத்துறையில் வளமுறச்செய்த பெருமை வணிக மரபினர்களுக்குத்தான். ஆனல் இன்றைய நிலையில் இவர்களின் நிலையும் ஏனைய பிற்பட்டமக்களை போன்றேயுள்ளது. வணிகப்பெருமக்களின் முன்னேற்றத்திற்கென ஏற்பட்ட முரசே வணிக முரசு. சிறந்த அறிஞர்களின் ஆய்வுரை, கட்டுரை, கதைகள், சமூகப்பெரியோர்களின் வரலாறு முதலியன பொலிவுடன் வெளிவந்துள்ளன. இதை எல்லா வணிக மரபினரும், பிற்பட்ட, முற்பட்ட அத்தனை மக்களும் வாங்கி படிக்கவேண்டும்.

∴ ∴ ∴ ∴

## வரப்பெற்ருேம்.

"காங்கிரஸ்" தேசீய சமூக வார இதழ்

ஆசிரியர்:- சிவாசுந்தரம். தனி இதழ் 0–1–0.

அலுவலகம்: காங்கிரஸ், தெப்பக்குளம், திருச்சி.

★

உ

முருகா.

★ தஞ்சை ★

# இராசராச சமய சங்கம்

# மகா பாரத நல்விழா.

★

## 20-1-57 முதல் 24-2-57 முடிய

மெய்யன்புடையீர்,

பாரத நாட்டின் பழம்பெரும் இதிகாசங்களுள் ஒன்று **மகா பாரதம்.** எல்லா அறங்களையும் தன்னகத்தே கொண்டது. வியாச முனிவர் கூற விநாயகப்பெருமானே எழுதிய விழுமியது. இந்த இதிகாசத்தைத் தொடர்ந்து கேட்டோர் அநேக ஆண்டுகள் அநேக அற நூல்களைப் படித்து அறிய வேண்டியவை அனைத்தும் எளிதில் உணர்ந்து உய்யலாம்.

ஆதலின்

நமது தஞ்சையம்பதியில்

**அரண்மனை திறந்த வெளியில்**

அமைத்த அழகிய பந்தலில்

சென்னை "திருப்புகழ் அமிர்தம்" ஆசிரியர்

திருமுருக **கிருபானந்தவாரி** அவர்கள்

அடியிற்கண்ட நிகழ்ச்சி நிரலின்படி

நாடோறும் மாலை 6 மணி முதல் இன்னிசை விரிவுரை நிகழ்த்துவார்கள்.

அன்பர்கள் அனைவரும் வந்து செவிமடுத்து சிந்தை மகிழ்வார்களாக.

ராவ்பகதூர்
A. வீரையாவாண்டையார்,
(பூண்டி)
President.

D. ராஜராஜேஸ்வரன்,
P. சாமிநாதன்,
Joint Secretaries.

# நிகழ்ச்சி நிரல்.

| நாள்: | தேதி: | பொருள்: |
|---|---|---|
| 1 | 20—1—57 | உதங்கர் |
| 2 | 21—1—57 | ஸர்ப்ப யாகம் |
| 3 | 22—1—57 | யயாதி |
| 4 | 23—1—57 | சகுந்தலை |
| 5 | 24—1—57 | சந்தனு |
| 6 | 26—1—57 | பாண்டு ஜனனம் |
| 7 | 27—1—57 | பாண்டவர் அவதாரம் |
| 8 | 28—1—57 | விற்பயிற்சி |
| 9 | 29—1—57 | வாரணாவத வாசம் |
| 10 | 30—1—57 | பகன் வதை |
| 11 | 31—1—57 | திரௌபதி திருமணம் |
| 12 | 1—2—57 | சுபத்திரை திருமணம் |
| 13 | 2—2—57 | இராஜசூயம் |
| 14 | 3—2—57 | திரௌபதி மானசம்ரக்ஷணம் |
| 15 | 4—2—57 | அர்ச்சுனன் தவநிலை |
| 16 | 5—2—57 | இந்திரலோக பட்டாபிஷேகம் |
| 17 | 6—2—57 | குபேரன் சந்திப்பு |
| 18 | 7—2—57 | சித்ரசேனன் செயல் |
| 19 | 9—2—57 | சயிந்தவன் |
| 20 | 10—2—57 | சாவித்திரி |
| 21 | 12—2—57 | துருவாசர் துயரம் |
| 22 | 13—2—57 | நச்சுப்பொய்கை |
| 23 | 15—2—57 | கீசக வதம் |
| 24 | 16—2—57 | நிரைமீட்சி |
| 25 | 17—2—57 | கண்ணன் தூது |
| 26 | 18—2—57 | விசுவ ரூபம் |
| 27 | 19—2—57 | பீஷ்மர் முத்தி |
| 28 | 21—2—57 | அபிமன்யு முத்தி |
| 29 | 22—2—57 | கர்ணன் முத்தி |
| 30 | 23—2—57 | துரியோதனன் வதம் |
| 31 | 24—2—57 | ஸ்ரீ தருமர் பட்டாபிஷேகம் |

சுபம்! சுபம்! சுபம்!

ஆசிரியரும் வெளியிடுபவரும் P. வீரபத்திரன் அவர்கள். கரந்தை, ஞாயிறு பதிப்பகத்தில் N. கணேசனீ அவர்களால் அச்சிடப்பெற்

"உரிமைமுழக்கம்" அலுவலகம் : 29, வாண்டையார் காலனி, புஷ்பவநகர், தஞ்சாவூர், தமிழ்நாடு.